Bible. N.T. Matthew. Tamil. 1863.

# மத்தேயு

MATTĒYU EḺUTINA

எழுதின

CUVICĒṢAM

சுவிசேஷம்.

---

ATTHEW'S GOSPEL.

FOR THE AMERICAN BIBLE SOCIETY.

MADRAS:
PRINTED AT THE AMERICAN MISSION PRESS.
1863.

# மத்தேயு எழுதின

## சுவிசேஷம்.

---

## க. அதிகாரம்.

*க. கிறிஸ்துவின் வமிச வரலாறு: ௰அ. அவர் சென்ம விவரம்.*

க. ஆபிரகாமின் சந்ததியான தாவீதின் சந்ததி
கிய யேசுக்கிறிஸ்துவின் வமிச வரலாறு.
உ. ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்றான்; ஈசாக்கு
க்கோபைப் பெற்றான்; யாக்கோபு யூதாவையும்
வன் சகோதரரையும் பெற்றான்;
௩. யூதா தாமாரிடத்தில் பேரேசையுஞ் செரக்கை
ப் பெற்றான்; பேரேஸ் எத்சரோனைப் பெற்றான்;
௪. எத்சரோன் ராமைப் பெற்றான்; ராம் அம்மி
தாபைப் பெற்றான்; அம்மினதாபு நாக்ஷோனைப்
பற்றான்;
௫. நாக்ஷோன் சல்மோனைப் பெற்றான்; சல்
ான் இராகாப்பினிடத்தில் போவசைப் பெற்
ன்; போவஸ் ரூத்தினிடத்தில் ஒபேத்தைப் பெற்
ன்; ஒபேத் ஈஷாயைப் பெற்றான்;
௬. ஈஷாய் இராசனாகிய தாவீதைப் பெற்றான்;
ராசனாகிய தாவீது ஊரியாவின் மனைவியிடத்தில்
லாமோனைப் பெற்றான்;
எ. சலோமோன் ரெகோபேயாமைப் பெற்றான்;
கோபேயாம் அபீயாவைப் பெற்றான்; அபீயா
ாவைப் பெற்றான்;

அ. ஆசா யோஷாபாத்தைப் பெற்றான்; யோஷா
பாத் யெகோராமைப் பெற்றான்; யெகோராம் அகஸ்
யாவைப் பெற்றான்;
கூ. அகஸ்யா யோதாமைப் பெற்றான்; யோதாம்
ஆகாசைப் பெற்றான்; ஆகாஸ் இஸ்கியாவைப் பெற்
றான்;
ய. இஸ்கியா மனாசேயைப் பெற்றான்; மனாசே
ஆமோனைப் பெற்றான்; ஆமோன் யோஷியாவைப்
பெற்றான்;
யக. யோஷியா பாபேலுக்குச் சிறைப்பட்டுப்
போகிற காலத்தில், யெகொனியாவையும் அவன்
சகோதரரையும் பெற்றான்;
யஉ. பாபேலுக்குச் சிறையாய்க் கொண்டுபோகப்
பட்டபின்பு யெகொனியா சலாதியேலைப் பெற்
றான்; சலாதியேல் சொரொபாபேலைப் பெற்றான்;
யரு. சொரொபாபேல் அபியூத்தைப் பெற்றான்; அபி
யூத் எலியாக்கீமைப் பெற்றான்; எலியாக்கீம் அசோரைப்
பெற்றான்;
யச. அசோர் சாதோக்கைப் பெற்றான்; சாதோக்
ஆகீமைப் பெற்றான்; ஆகீம் எலியூத்தைப் பெற்
றான்;
யரு. எலியூத் எலெயாசாரைப் பெற்றான்; எலெ
யாசார் மாத்தானைப் பெற்றான்; மாத்தான் யாக்கோ
பைப் பெற்றான்;
யசு. யாக்கோபு மரியாளின் புருஷனாகிய யோ
சேப்பைப் பெற்றான்; அவளிடத்தில் கிறிஸ்து என்
னும் யேசு பிறந்தார்.
யஎ. இவ்விதமாய் உண்டான தலைமுறைகளெல்
லாம், ஆபிரகாம்முதல் தாவீதுவரைக்கும் பதினாலு
தலைமுறைகளும், தாவீதுமுதல் பாபேலுக்குச்
சிறைப்பட்டுப் போனதுவரைக்கும் பதினாலு தலை

முறைகளும், பாபேலுக்குச் சிறைப்பட்டுப்போனதுமுதல் கிறிஸ்துவரைக்கும் பதினாலு தலைமுறைகளுமாம்.

௰அ. யேசுக்கிறிஸ்துவின் சென்ம விருத்தாந்தம். அவருடைய மாதாவாகிய மரியாள் யோசேப்புக்கு வாக்குத்தத்தையானபின்பு, அவர்கள் கூடி வாழ்வதற்குமுன், அவள் பரிசுத்த ஆவியினாலே கருப்பவதியென்று காணப்பட்டாள்.

௰௯. அவளுடைய புருஷனாகிய யோசேப்பு நீதிமானாகையால், அவளை அவதூறுபண்ண விரும்பாமல், இரகசியமாய் அவளைத் தள்ளிவிட எண்ணங்கொண்டான்.

௨௰. அவன் இவைகளைச் சிந்தனைபண்ணுகையில், கர்த்தருடைய தூதன் சொப்பனத்தில் அவனுக்குத் தோன்றி, தாவீதின் புத்திரனாகிய யோசேப்பே, நீ உன் மனைவியாகிய மரியாளைச் சேர்த்துக்கொள்ள அஞ்சவேண்டாம்; அவளுடைய கருப்பத்திலுள்ளது பரிசுத்த ஆவியினாலாயிற்று.

௨௧. அவள் ஒரு புத்திரனைப் பிரசவிப்பாள்; அவர் தம்முடைய சனங்களை அவர்கள் பாவங்களினின்றும் இரட்சிப்பார்; ஆதலால் அவருக்கு யேசுவென்று பெயரிடுவாயாகவென்றான்.

௨௨. இவைகளெல்லாம் நடந்ததினால், "பாருங்கள், கன்னியானவள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப் பிரசவிப்பாள்; அவருக்கு இம்மானுவேலென்று பெயரிடுவார்கள்" என்று,

௨௩. தீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தர் சொல்லிய வாக்கு நிறைவேறலாயிற்று. இம்மானுவேலென்பதற்குத் தேவன் நம்முடனிருக்கிறாரென்று அருத்தமாம்.

௨௪. யோசேப்பு நித்திரை தெளிந்து எழுந்தபொழுது தனக்குக் கர்த்தருடைய தூதன் கட்டளையிட்டபடி தன் மனைவியைச் சேர்த்துக்கொண்டான்.

௨௫. ஆயினும், தன்னால் யேசுவென்று பெயரிடப்பட்ட முதற்பேறான புத்திரனை அவள் பெறும் வரைக்கும் அவன் அவளை அறியாதிருந்தான்.

---

## ௨. அதிகாரம்.

௧. சாஸ்திரிகள் நட்சத்திரத்தினால் நடத்தப்படல்; ௰௩. யோசேப்பு யேசுவையும் மரியாளையும் எகிப்துக்குக் கொண்டுபோதல்; ௰௬. பேத்லகேமூரில் ஏரோது இராசா குழந்தைகளைக் கொல்லுவித்தல்; ௰௯. கிறிஸ்து இஸ்ரவேல் தேசத்துக்குத் திரும்பிவந்து நாசரேத்தூரில் வாசம்பண்ணல்.

௧. ஏரோது இராசாவின் காலத்தில், யூதாவிலுள்ள பேத்லகேமிலே யேசு பிறந்த பின்பு, சாஸ்திரிகள் கீழ்த்திசையினின்று யெருஷலேமுக்கு வந்து,

௨. பிறந்திருக்கிற யூதரின் இராசா எங்கே? அவரைக்குறித்த நட்சத்திரத்தை நாங்கள் கீழ்த்திசையில் கண்டு, அவரை நமஸ்கரிக்க வந்தோமென்றார்கள்.

௩. ஏரோது இராசா அதைக் கேட்டதினால், அவனும், அவனோடே யெருஷலேமியர் அனைவருங் கலங்கினார்கள்.

௪. அவன், பிரதான ஆசாரியர், சனங்களின் வேதபாரகர் எல்லாரையுங் கூடிவரச்செய்து, கிறிஸ்து எங்கே பிறப்பாரென்று அவர்களிடத்தில் விசாரித்தான்.

௫. அவர்கள் அவனை நோக்கி, தீர்க்கதரிசி, “யூதா தேசத்திலுள்ள பேத்லகேமே, என் சனங்களாகிய

இஸ்ரவேலரைப் பரிபாலனம்பண்ணும் இராசா உன்னிடத்திலே தோன்றுவதினால், யூதாதேசத்தி லுள்ள பிரபுகளில் நீ சிறியதல்ல'' என்று எழுதியி ருக்கிறான்;

௬. ஆகையால் அப்படியே யூதா தேசத்திலுள்ள பேத்லகேமில் பிறப்பாரென்றார்கள்.

௭. அப்பொழுது ஏரோது அந்தச் சாஸ்திரிகளை இரகசியமாய் அழைத்து, அவர்களுக்கு அந்த நட்சத் திரந் தோற்றின காலத்தை ஆராய்ந்தறிந்துகொண்டு,

௮. நீங்கள் போய் அந்தப் பிள்ளையைக் குறித்து நன்றாய் விசாரித்துப் பாருங்கள்; நீங்கள் அதைக் கண்டபின்பு, நானும் போய் அதை நமஸ்கரிக்கும் படி செய்தியை எனக்குத் தெரிவியுங்களென்று சொல்லி, அவர்களைப் பேத்லகேமுக்கு அனுப்பி விட்டான்.

௯. இராசா சொன்னதை அவர்கள் கேட்டுப் புறப்பட்டுப் போனார்கள்: கீழ்த்திசையில் அவர்கள் கண்ட நட்சத்திரம் அவர்களுக்கு முன்னே போய், அந்தப் பிள்ளை இருந்த ஸ்தானம்வரைக்குஞ் சென்று மேலே நின்றது.

௰. அவர்கள் அந்த நட்சத்திரத்தைக் கண்டு, மிகுந்த ஆனந்தக் களிப்படைந்தார்கள்.

௰௧. பின்பு அவர்கள் அந்த வீட்டிலே பிரவே சித்து, அதின் மாதாவாகிய மரியாளோடே பிள்ளை யைக் கண்டு, வணக்கமாய் விழுந்து, அதை நமஸ் கரித்தார்கள். அன்றியும் அவர்கள் தங்கள் பொக்கி ஷப் பெட்டிகளைத் திறந்து, பொன்னையும், குந்துரு வையும், வெள்ளைப் போளத்தையும் அதற்குக் கா ணிக்கையாய் வைத்தார்கள்.

௰௨. பின்பு அவர்கள், ஏரோதினிடத்தில் திரும் பிப்போகலாகாதென்று சொப்பனத்திலே தேவ எச்

சரிப்புப் பெற்று, வேறு வழியாகத் தங்கள் தேசத்துக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

௰௩. அவர்கள் புறப்பட்டுப் போனபின்பு, கர்த்தருடைய தூதன் ஒருவன் சொப்பனத்திலே யோசேப்புக்குத் தரிசனமாகி, ஏரோது இந்தக் குழந்தையைக் கொலைசெய்யத் தேடுவான்; ஆதலால் நீ எழுந்து, குழந்தையையும், அதின் மாதாவையுங் கூட்டிக்கொண்டு, எகிப்து தேசத்துக்கு ஓடிப்போய், நான் செய்தியை உனக்குத் தெரிவிக்கும்வரைக்கும் அங்கே தங்குவாயாகவென்றான்.

௰௪. அப்பொழுது அவன் எழுந்து, இராத்திரியிலே குழந்தையையும், அதின் மாதாவையுங் கூட்டிக்கொண்டு, எகிப்து தேசத்துக்குப்போய்,

௰௫. ஏரோதேயின் மரணபரியந்தம் அங்கே தங்கினான்; அதினால், "எகிப்தினின்று என் புத்திரனை வரவழைத்தேன்" என்று தீர்க்கதரிசியைக் கொண்டு, கர்த்தர் சொல்லுவித்த வாக்கு நிறைவேறலாயிற்று.

௰௬. பின்பு ஏரோது, தான் சாஸ்திரிகளினால் வஞ்சிக்கப்பட்டதைக் கண்டு, மிகவுங் குரோதங்கொண்டு, அந்தச் சாஸ்திரிகளிடத்தில் தான் கேட்டாராய்ந்த காலத்தின்படி, பேத்லகேமிலும், அதின் சகல எல்லைகளிலும் இரண்டுவயதுமுதல், அதற்குட்பட்ட சகல ஆண்பிள்ளைகளையுங் கொலைசெய்ய ஆட்களை அனுப்பினான்.

௰௭. அப்பொழுது "ராமாவிலே புலம்பலும், அழுகையும், மகா துக்க சத்தமுங் கேட்டன; இராகேல் தன் பிள்ளைகள் இல்லையென்று, அவர்கள் நிமித்தம் அழுதுகொண்டிருக்கிறாள்; அவள் ஆறுதலுக்கு இடங்கொடாள்" என்று,

௰௮. எரேமியா தீர்க்கதரிசியினால் சொல்லப்
பட்ட வாக்கு நிறைவேறிற்று.
௰௯. பின்பு ஏரோது இறந்தபொழுது, சொப்ப
னத்தில் கர்த்தருடைய தூதன் ஒருவன் யோசேப்
புக்குத் தோன்றி,
௨௰. நீ எழுந்து, குழந்தையையும், அதின் மாதா
வையுங் கூட்டிக்கொண்டு, இஸ்ரவேல் தேசத்துக்
குப் போ: பிள்ளையின் பிராணனை வாங்கத் தேடி
னவர்கள் இறந்துபோனார்களென்று சொல்ல—
௨௧. அவன் எழுந்து, குழந்தையையும், அதின்
மாதாவையுங் கூட்டிக்கொண்டு, இஸ்ரவேல் தேசத்
துக்கு வருகையில்,
௨௨. அர்கிலேயு தன் பிதாவாகிய ஏரோதின் பட்
டத்துக்கு வந்து, யூதேயாவை அரசாளுகிறானென்று
கேள்விப்பட்டு, அங்கே போகப் பயந்தான்; அப்
பொழுது சொப்பனத்தில் அவன் தேவ எச்சரிப்புப்
பெற்று, விலகிக் கலிலேயா நாட்டின் திசைகளுக்
குப் போய்,
௨௩. நாசரேத்தென்னுமூரில் வந்து, வாசம் பண்
ணினான்; இப்படியே "நசரீயன் என்னப்படுவார்"
என்று தீர்க்கதரிசிகளினாலே சொல்லப்பட்ட வாக்கு
நிறைவேறிற்று.

## ௩. அதிகாரம்.

௧. யோவானின் விருத்தாந்தம்: ௭. அவன் ஞானஸ்நானம் பிரசித்தப்படுத்தல்: ௰௩. கிறிஸ்து அவனிடத்தில் வந்து ஞானஸ்நானம் பெறல்.

௧. அக்காலத்திலே யோவான்ஸ்நானன் யூதேயா
வின் வனத்தில் வந்து,
௨. பரமராச்சியஞ் சமீபித்து வந்தபடியால், மனந்
திரும்புங்களென்று பிரசங்கம்பண்ணினான்.

௩. "கர்த்தாவின் வழியை ஆயத்தப்படுத்துங்கள்;
அவருடைய பாதைகளைச் செவ்வைபண்ணுங்க
ளென்பதை, வனத்தில் ஒருவன் சத்தமிட்டுச் சொல்
லுவான்" என்று ஏசாயா தீர்க்கதரிசியினுற் குறிக்
கப்பட்டவன் இவனே.
௪. இந்த யோவான் ஒட்டக மயிர் உடையைத்
தரித்து, தன் அரையிலே வார்க்கச்சுக் கட்டிக்கொண்
டிருந்தான்: வெட்டுக்கிளிகளுங் காட்டுத்தேனும்
அவனுக்கு ஆகாரமாயிருந்தன.
௫. அப்பொழுது யெருஷலேமியரும், யூதேயா
தேசத்தாரனைவரும், யோர்தான் நதியைச் சேர்ந்த
சுற்றுப்புறத்தார் யாவரும் புறப்பட்டு, அவனிடத்
திற்போய்,
௬. தங்கள் தங்கள் பாவங்களை உணர்ந்துசொல்லி,
அவனாலே யோர்தானில்ஞானஸ்நானம்பெற்றார்கள்.
௭. மேலும் அவன், பரிசேயரிலும், சதுசேயரி
லும் அநேகர் தன்னால் ஞானஸ்நானம் பெற வரு
வதைக் கண்டு, அவர்களை நோக்கி, விரியன் குட்டி
களே, வருங் கோபத்துக்குத் தப்பிக்கொள்ள உங்க
ளுக்கு உணர்த்தினவன் யாவன்?
௮. மனந்திரும்புதலுக்குத் தக்க கனிகளைக் கொ
டுங்கள்.
௯. ஆபிரகாம் எங்களுக்குப் பிதாவென்று சொல்
லும்படி, உங்கள் உள்ளத்திலே நினைத்துக்கொள்ளா
திருங்கள். ஆபிரகாமுக்குத் தேவன் இந்தக் கற்க
ளிலும் பிள்ளைகளைத் தோற்றுவிக்க வல்லவராயிருக்
கிறாரென்று, நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.
௰. இப்பொழுது கோடரி மரங்களின் வேரரு
கில் வைத்திருக்கின்றது; ஆதலால் நல்ல கனிகொ
டாத மரங்களெல்லாம் வெட்டப்பட்டு, அக்கினியி
லே போடப்படும்.

௰௧. நீங்கள் மனந்திரும்பும்பொருட்டு நான் சலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானங் கொடுக்கிறேன்: எனக்குப் பின்வருபவர் என்னிலும் வல்லவர்; அவருடைய பாதரட்சைகளை ஏந்தவும், நான் பாத்திரன் அல்ல; அவரே பரிசுத்த ஆவியினாலும், அக்கினியினாலும் உங்களுக்கு ஞானஸ்நானங் கொடுப்பார்.

௰௨. அவருடைய கையில் தூற்றுக்கூடை இருக்கின்றது. அவர் தமது களம் முழுவதையும் விளக்கி, தமது கோதுமையைக் களஞ்சியத்திற் சேர்ப்பார்; பதரையோ, அவியாத அக்கினியினால் தகிப்பாரென்ருன்.

௰௩. அப்பொழுது யேசு, யோவானிடத்தில் ஞானஸ்நானம் பெறும்படி, கலிலேயாவை விட்டு, யோர்தானண்டையில் அவனிடத்தில் வந்தார்.

௰௪. யோவான் அவரை மறுத்து, உம்மாலே நான் ஞானஸ்நானம் பெறுவது அவசியமாயிருக்க — நீர் என்னிடத்தில் வரலாமாவென்ருன்.

௰௫. அப்பொழுது யேசு அவனை நோக்கி, இப்படி எந்த நீதியையும் நிறைவேற்றுவது நமக்குக் கடமை; ஆதலால் இப்பொழுது சம்மதிக்கவேண்டுமென்று சொல்ல— அவன் சம்மதித்தான்.

௰௬. யேசு, ஞானஸ்நானம் பெற்று, சலத்தை விட்டு ஏறிவந்தவுடனே, வானம் அவருக்குத் திறக்கப்பட — தேவனுடைய ஆவி புருவைப்போல் இறங்கி, அவர்மேல் வருகிறதை அவன் கண்டான்.

௰௭. மேலும் இவர் எனது அன்பான குமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேனென்று, ஒரு வாக்கு வானத்தினின்றும் பிறந்தது.

# ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து சோதிக்கப்படல்; ௰உ. அவர் கப்பர்நகூமூரில் வாசம்பண்ணல்; ௰எ. அவர் சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்தல்; ௰அ. பேதுரு, அந்திரேயா, யாக்கோபு, யோவான் என்பவர்களைத் தம்மிடத்தில் வரவழைத்தல்; உ௩. கிறிஸ்து வியாதியுள்ளவர்களைச் சொஸ்தப்படுத்தல்.

௧. பின்பு யேசு, பிசாசினாலே சோதிக்கப்படும்படி, ஆவியினால் வனத்திற்குக் கொண்டுபோகப்பட்டு,

௨. நாற்பதுநாள் இரவும் பகலும் உபவாசமாயிருந்தார்; பின்பு அவருக்குப் பசியுண்டாயிற்று.

௩. அப்பொழுது சோதிக்கிறவன் அவரிடத்தில் வந்து, நீ தேவனுடைய குமாரனாயிருந்தால், இந்தக் கற்கள் அப்பமாகும்படி கட்டளையிடென்றான்.

௪. அதற்குத்தரமாக அவர், "மனிதன் அப்பத்தினாலேமாத்திரமல்ல, கர்த்தருடைய வாயினின்று புறப்படும் எந்த வாக்கினாலுஞ் சீவிக்கிறான்" என்று எழுதியிருக்கின்றதென்றார்.

௫. அப்பொழுது பிசாசானவன் அவரைப் பரிசுத்த நகரத்திற்குக் கொண்டுபோய், அவரைத் தேவாலயத்தின் மேல் உப்பரிகையில் நிறுத்தி,

௬. அவரிடத்தில், "அவர் உன்னைக்குறித்துத் தம்முடைய தூதர்களுக்குக் கட்டளையிட—அவர்கள் உன் பாதங் கல்லில் இடறாதபடிக்கு, உன்னைக் கைகளில் ஏந்திக்கொள்வார்கள்" என்று எழுதியிருக்கின்றது; ஆகையால், நீ தேவனுடைய குமாரனானால் தாழக் குதியென்றான்.

௭. அதற்கு யேசு, "உன் தேவனாகிய கர்த்தாவைப் பரீட்சைசெய்யாதிருப்பாயாக" என்றும், எழுதியிருக்கின்றதென்றார்.

௮. மறுபடியும் பிசாசானவன் அவரை மிகவும் உயர்ந்த மலையின்மேல் கொண்டுபோய், உலகத்திலுள்ள இராச்சியங்கள் எல்லாவற்றையும், அவைகளின் மகிமையையும் அவருக்குக் காண்பித்து,

௯. அவருடனே, நீ விழுந்து என்னைத் தொழுதாயானால், இவையெல்லாவற்றையும் உனக்குத் தருவேனென்று சொல்ல—

௰. யேசு, அவனை நோக்கி, சாத்தானே, அப்புறம் போ; "உன் தேவனாகிய கர்த்தாவைத் தொழுதுகொண்டு, அவர் ஒருவரையே சேவிப்பாயாக" என்று, எழுதியிருக்கின்றதென்றார்.

௰௧. அப்பொழுது பிசாசு அவரை விட்டுப் புறப்பட்டுப்போக—தேவதூதர்கள் வந்து அவருக்குப் பணிவிடைசெய்தார்கள்.

௰௨. பின்பு யோவான் காவலில் வைக்கப்பட்டானென்று யேசு கேள்விப்பட்டு, கலிலேயாவுக்குப் போய்,

௰௩. நாசரேத்தை விட்டு, செபுலோன் நப்தாலி என்னும் இவைகளின் எல்லைகளிலே சமுத்திர தீரத்திலுள்ள கப்பர்நாகூமூரிற் சென்று, வாசம் பண்ணினார்.

௰௪. அதினால், "கடற்கரை அருகிலும், யோர்தானுக்கப்புறத்திலுமுள்ள அந்நியருடைய கலிலேயா தேசமாகிய செபுலோன் தேசத்தாரும், நப்தாலி தேசத்தாருமாகிய இருளிலேயிருக்கிற சனங்கள் பெரிய ஒளியைக் கண்டார்கள்.

௰௫. மரண நிழல்பொருந்திய திசையிலிருந்தவர்கள்மேல் ஒளி பிரகாசித்தது" என்று,

௰௬. ஏசாயா தீர்க்கதரிசி சொல்லிய வாக்கு நிறைவேறிற்று.

௰௭. அதுமுதல் யேசு, பரமஇராச்சியஞ் சமீபித்தது; ஆகையால் மனந்திரும்புங்களென்று பிரசங்கிக்கத் தொடங்கினார்.

௰௮. அவர் கலிலேயாவின் சமுத்திர தீரத்தில் உலாவுகையில், மீன்பிடிக்கிறவர்களான பேதுரு என்னுஞ் சீமோனும், அவனுடைய சகோதரன் அந்திரேயாவுமாகிய இருவருங் கடலிலே வலைவீசுகிறதைக் கண்டு,

௰௯. அவர்களை நோக்கி, என்னைப் பின்பற்றி வாருங்கள்; நான் உங்களை மனுஷரைப் பிடிக்கிறவர்களாக்குவேனென்றார்.

௨௰. உடனே அவர்கள் வலைகளை விட்டு, அவரைப் பின்பற்றினார்கள்.

௨௧. அவர் அவ்விடம்விட்டுப் போகையில், செபேதேயுவின் புத்திரனாகிய யாக்கோபு, அவன் சகோதரனாகிய யோவான் என்னும் வேறிரண்டு சகோதரர் தங்கள் பிதாவாகிய செபேதேயுவினுடனே படவில் தங்கள் வலைகளைத் தைத்துக்கொண்டிருக்கக்கண்டு, அவர்களையும் அழைத்தார்.

௨௨. உடனே அவர்கள் படவையும், தங்கள் பிதாவையும் விட்டு அவரைப் பின்பற்றினார்கள்.

௨௩. பின்பு யேசு, அவர்களுடைய ஆலயங்களில் உபதேசஞ்செய்து, இராச்சியத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, கலிலேயாவிலெங்குஞ் சென்று, சனங்களின் சகலவித வியாதிகளையும், சகலவித நோய்களையும் மாற்றினார்.

௨௪. அதினால் சீரியதேசம் எங்கும் அவருடைய கீர்த்தி பரம்பியிருந்தது. பலவிதமான வியாதிகளையும், வேதனைகளையுமுடைய பிணியாளிகள் யாவரையும், பிசாசுபிடித்தவர்களையும், சந்திரரோகிகளையும், திமிர்வாதக்காரரையும் அவரிடத்தில் கொ

ண்டுவந்தார்கள்: அவர் அவர்களைச் சொஸ்தப்படுத்தினார்.

௨௫. கலிலேயாவிலும், தெக்கப்போலியிலும், யெருஷலேமிலும், யூதேயாவிலும், யோர்தான் நதிக்கு அப்புறத்திலுமிருந்து, வெகு சனங்கள் வந்து அவரைப் பின்சென்றார்கள்.

# ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்து மலையின்மேல் உபதேசித்தல்: ௩. வாழ்வுடையவர் இன்னாரென்பதை நிருணித்தல்: ௰௩. தம்முடைய சீஷரை உப்புக்கும், ஒளிக்கும், ஒப்பிடல்: ௰௭. கிறிஸ்து தாம் கட்டளை நிறைவேற்றும்படி தோன்றினாரென்பதைச் சொல்லல்: ௨௧. கொலை, குரோதம் இவைகளை விலக்கல்: ௨௭. பரதாரகமனத்தை விலக்கல்: ௩௩. பொய்யாணையிடுவதை விலக்கல்: ௩௮. நிந்தனை செய்வதை விலக்கல்: ௪௧. சத்துருக்களுக்கு நன்மைசெய்யக் கட்டளையிடல்.

௧. அவர் திரளான சனங்களைக் கண்டு, மலையின்மேலேறினார்; அவர் உட்காந்தபின்பு, அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்தார்கள்.

௨. அப்பொழுது அவர் தமது வாய்திறந்து, அவர்களுக்கு உபதேசிக்கத் தொடங்கினார்.

௩. ஆவியில் எளிமையுள்ளவர்கள் வாழ்வுடையவர்கள்; பரம இராச்சியம் அவர்களுக்கே உரியது.

௪. துக்கப்படுகிறவர்கள் வாழ்வுடையவர்கள்; அவர்கள் ஆறுதலை அடைவார்கள்.

௫. தாழ்ந்த சிந்தையுள்ளவர்கள் வாழ்வுடையவர்கள்; அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்வார்கள்.

௬. நீதியின்மேல் பசிதாகமுள்ளவர்கள் வாழ்வுடையவர்கள்; அவர்கள் திருத்தியடைவார்கள்.

௭. இரக்கமுள்ளவர்கள் வாழ்வுடையவர்கள்; அவர்கள் இரக்கத்தைப் பெறுவார்கள்.

௮. சுத்தமான இருதயமுள்ளவர்கள் வாழ்வுடையவர்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்.
௯. சமாதானத்தை நடப்பிக்கிறவர்கள் வாழ்வுடையவர்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் என்னப்படுவார்கள்.
௰. நீதியினிமித்தந் துன்பப்படுகிறவர்கள் வாழ்வுடையவர்கள்; பரம இராச்சியம் அவர்களுக்கேயுரியது.
௰௧. என்னிமித்தம் மனுஷர் உங்களை நிந்தித்து, துன்பப்படுத்தி, சகலவித தீமொழிகளையும் உங்கள்மேல் பொய்யாய்ச் சொன்னார்களானால், நீங்கள் வாழ்வுடையவர்கள்.
௰௨. சந்தோஷப்பட்டு மிகவுங் களிகூருங்கள்; பரமண்டலத்தில் உங்களுக்கு மிகுந்த பலன் கிடைக்கும்; பூருவகாலத்திலுள்ள தீர்க்கதரிசிகளையும் இவ்விதமாய்த் துன்பப்படுத்தினார்கள்.
௰௩. நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கிறீர்கள்; உப்பானது சாரமற்றுப்போனால், திரும்ப யாதினால் சாரமாக்கப்படும்? இனி அது வெளியே கொட்டப்படுவதற்கும், மனுஷரால் மிதிக்கப்படுவதற்குமேயன்றி, வேறொன்றுக்குமுதவாது.
௰௪. நீங்கள் உலகத்திற்கு ஒளியாயிருக்கிறீர்கள். மலையின்மேலுள்ள நகரம் மறைந்திருக்கமாட்டாது.
௰௫. மனுஷர் விளக்கைக் கொளுத்தி, மரக்காலால் மூடிவையாமல், ஒரு தண்டின்மேல் வைப்பார்கள்; அதினால் அது வீட்டிலுள்ள யாவருக்கும் ஒளிகொடுக்கும்.
௰௬. அப்படியே மனுஷர் உங்கள் நற்கிரியைகளைக் கண்டு, பரமண்டலத்திலுள்ள உங்கள் பிதாவின் மகிமை பிரகாசிக்கப்பண்ணும்பொருட்டு, உங்கள் ஒளி அவர்களுக்குமுன் பிரகாசிக்கக்கடவது.

௰௭. நியாயப்பிரமாணத்தையும், தீர்க்கதரிசன வாக்கியங்களையும் ஒழிப்பதற்கு நான் வந்தேனென்று நீங்கள் நினைக்கவேண்டாம்; அவைகளை ஒழிக்கிறதற்கல்ல, நிறைவேற்றுவதற்கே வந்தேன்.

௰௮. வேதப்பிரமாணம் முழுவதும் நிறைவேறுவதேயன்றி, வானமும் பூமியும் ஒழியும்வரைக்கும், அதில் ஒருசிறு எழுத்தாயினும், ஒரு எழுத்தின் உறுப்பாயினும் ஒழிந்து போவதில்லையென்று, மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௯. ஆதலால் இந்தக் கட்டளைகளில் மிகவுஞ் சிறிய ஒரு கட்டளையையாயினு மீறி, அவ்வண்ணமே மனுஷருக்கு உபதேசிக்கிறவனெவனோ, அவன் பரம இராச்சியத்தில் மிகவுஞ் சிறியவனென்றெண்ணப்படுவான்; அவைகளின்படி செய்தும், உபதேசித்தும் வருகிறவனெவனோ, அவன் பரம இராச்சியத்திலே பெரியவனென்றெண்ணப்படுவான்.

௨௰. வேதபாரகரும், பரிசேயருமானவர்களின் நீதியிலும் உங்கள் நீதி அதியுத்தமமல்லாதிருந்தால், நீங்கள் பரம இராச்சியத்தில் ஒருபொழுதும் பிரவேசிக்கமாட்டீர்களென்று, நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௧. கொலைசெய்யாயாகவென்றும், கொலைசெய்பவன் நியாயத்தீர்ப்புக்குப் பாத்திரனென்றும் பூருவத்தாருக்குச் சொல்லிய வாக்கைக் கேள்விப்பட்டீர்கள்.

௨௨. நியாயமில்லாமல் தன் சகோதரன்மேல் கோபங்கொள்பவனெவனோ, அவன் நியாயத்தீர்ப்புக்குப் பாத்திரனாவான்: தன் சகோதரனைப் புத்தியீனனென்பவனெவனோ, அவன் பெரிய சங்கத்தீர்ப்புக்குப் பாத்திரனாவான்: அவனை மூடனென்பவனெவனோ, அவன் நரக அக்கினிக்குப் பாத்திரனா

வானென்று, நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௩. ஆதலால் நீ வேதிகையினிடத்தில் உன் காணிக்கையைக் கொண்டுவந்த சமயத்தில், உன்மேல் உன் சகோதரனுக்கு விரோதமுண்டென்று அங்கே நினைவுகொள்வாயாகில்,

௨௪. அந்த வேதிகைக்குமுன் உன் காணிக்கையை வைத்துவிட்டு, போய், முன்பு உன் சகோதரனுடனே ஒப்புரவாகி, பின்பு வந்து, உன் காணிக்கையைச் செலுத்துவாயாக.

௨௫. உன் எதிராளி உன்னை நியாயாதிபதியிடத்தில் ஒப்பியாமலும், அந்த நியாயாதிபதி உன்னைத் தலையாரியிடத்தில் ஒப்பியாமலும், நீ சிறைச்சாலையில் வைக்கப்படாமலுமிருக்கும்படி, நீ சீக்கிரமாய் உன் எதிராளியுடனே, வழியிலிருக்கிறபொழுது, அவனுடன் இணங்கிக்கொள்வாயாக.

௨௬. இல்லாவிட்டால் நீ ஒரு காசாகிலுங் குறையாமல், முழுமையுஞ் செலுத்தும்வரைக்கும், அவ்விடத்தை விட்டுத் திரும்பிவரமாட்டாயென்று, மெய்யாக உனக்குச் சொல்லுகிறேன்.

௨௭. விபசாரஞ் செய்யாயாகவென்று, பூருவத்தாருக்குச் சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டீர்கள்.

௨௮. ஒரு ஸ்திரியை இச்சித்துப்பார்க்கிறவன் எவனோ, அவன் தன் இருதயத்தில் அவளுடன் விபசாரஞ்செய்தாயிற்றென்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௯. ஆதலால் உன் வலக்கண் உனக்கு இடறுவரப்பண்ணினால், அதைத் தோண்டி எறிந்துவிடு; உன் சரீரம் முழுவதும் நரகத்திலே தள்ளப்படுவதைப்பார்க்கிலும், உன் அவயவங்களில் ஒன்று கெட்டுப்போவதே உனக்கு நலம்.

௩௰. உன் வலக்கை உனக்கு இடறுவரப்பண்ணி ஞல், அதைத் தறித்து எறிந்துவிடு; உன் சரீரம்மு ழுவதும் நரகத்திலே தள்ளப்படுவதைப்பார்க்கிலும், உன் அவயவங்களில் ஒன்று கெட்டுப்போவதே உனக்கு நலம்.

௩௧. ஒருவன் தன் மனைவியைத் தள்ளிவிடுகை யில், தொடராமுறி அவளுக்குக் கொடுக்கக்கடவன் என்று, சொல்லப்பட்டிருக்கின்றது.

௩௨. விபசார நிமித்தத்திஞலன்றி, எவனுகிலுந் தன் மனைவியைத் தள்ளிவிட்டால், அவன் அவளை விபசாரஞ் செய்யப்பண்ணுகிருனென்றும், தள்ளி விடப்பட்டவளை எவனுகிலும் விவாகம்பண்ணி ஞல், அவனும் விபசாரஞ் செய்கிருனென்றும் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௩. அன்றியும், பொய்யாணையிடாதிருப்பாயாக வென்றும், உன் ஆணைகளைக் கர்த்தருக்குச் செலுத் துவாயாகவென்றும், பூருவத்தாருக்குச் சொல்லப் பட்டதென்று கேள்விப்பட்டீர்கள்.

௩௪. நானே உங்களுக்கு இவ்வாக்குச் சொல்லு கிறேன்; நீங்கள் எவ்விதத்திலுஞ் சத்தியம்பண்ண லாகாது; வானத்தைக்கொண்டு சத்தியம்பண்ணலா காது; அது தேவனுடைய சிங்காசனம். பூமியைக் கொண்டு சத்தியம்பண்ணலாகாது; அது அவரு டைய பாதபீடம்.

௩௫. யெருஷலேமைக் கொண்டு சத்தியம்பண் ணலாகாது; அது மகா ராசாவின் நகரம்.

௩௬. உன் சிரசைக்கொண்டு சத்தியம்பண்ணலா காது; அதின் மயிரில் ஒன்றையாவது வெண்மை யாக்கவாயினும், கருமையாக்கவாயினும் உனக்கு வல்லமையில்லை.

௩௭. உள்ளதை உள்ளதென்றும், இல்லதை இல்லதென்றும், சொல்லக்கடவீர்கள்; இவைகளுக்கு அதிகமானது தீமையிலிருந்து விளைகின்றது.

௩௮. கண்ணுக்குப் பிரதியாகக் கண்ணும், பல்லுக்குப் பிரதியாகப் பல்லுமென்று சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்; நானோ உங்களுக்கு இவ்வாக்குச் சொல்லுகிறேன்.

௩௯. தீமைசெய்தவனுடனே நீங்கள் எதிர்த்து நிற்கலாகாது; ஒருவன் உன் வலக்கன்னத்தில் அடித்தால், மறுகன்னத்தையும் அவனுக்குத் திருப்பிச் சாய்.

௪௰. ஒருவன் உன் வஸ்திரத்தை எடுக்க உன்னுடனே வழக்காடினால், அவனுக்கு உன் மேல் அங்கியையும் விட்டுவிடு.

௪௧. ஒருவன் உன்னை ஒருநாழிகை வரும்படி வலாற்காரம்பண்ணினால், அவனுடனே இருநாழிகை வழி நடந்துபோ.

௪௨. உன்னிடத்தில் வேண்டிக்கொள்ளுகிறவனுக்குக் கொடு; உன்னிடத்தில் கடன்வாங்க விரும்புகிறவனுக்குப் பராமுகம்பண்ணாதே.

௪௩. நீ பிறனை நேசித்து, உன் சத்துருவைப் பகைக்கக்கடவாயென்று சொல்லிய வாக்கைக் கேள்விப்பட்டீர்கள்.

௪௪. நானோ உங்களுக்கு இவ்வாக்கைச் சொல்லுகிறேன்; உங்கள் சத்துருக்களை நேசியுங்கள்; உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மைசெய்யுங்கள்; உங்களை நிந்தித்து, உங்களைத் துன்பப்படுத்துகிறவர்கள் நிமித்தம், வேண்டுதல்பண்ணுங்கள்.

௪௫. அதினால் நீங்கள் பரமண்டலத்திலுள்ள உங்கள் பிதாவுக்குப் பிள்ளைகளாவீர்கள்; அவர் தீய

வர்கள்மேலும், நல்லவர்கள்மேலுந் தமது சூரியன் உதிக்கவும், நீதியுள்ளவர்கள்மேலும், அநீதியுள்ளவர்கள்மேலும் மழை பெய்யவும் பண்ணுகிறார்.

௪௬. உங்களை நேசிக்கிறவர்களைமாத்திரம் நீங்கள் நேசிப்பீர்களாகில், உங்களுக்கென்ன பலன்வரும்? ஆயக்காரரும் அப்படிச் செய்கிறார்களல்லவா?

௪௭. உங்கள் சகோதரரைமாத்திரம் நீங்கள் வாழ்த்துவீர்களாகில், நீங்கள் செய்கிற விசேஷமென்ன? ஆயக்காரரும் அப்படியே செய்கிறார்களல்லவா?

௪௮. ஆதலால் பரமண்டலத்திலுள்ள உங்கள் பிதா பூரண சற்குணமுள்ளவராயிருக்கிறதுபோல, நீங்களும் பூரண சற்குணமுள்ளவர்களாவீர்களாக.

---

## ௬. அதிகாரம்.

௧. தருமஞ்செய்யும் வகையைக் காட்டல்: ௨. நன்கொடை கொடுக்கும் முறையைத் தெரிவித்தல்: ௫. பிரார்த்தனை செய்யும் வகையை உணர்த்தல்: ௰௬. உபவாசஞ்செய்யும் விதத்தைக் குறித்தல்: ௰௯. உலகப்பொருளைச் சம்பாதிப்பதைக்குறித்துப் போதனை சொல்லல்: ௨௫. மெய்த்தேவபத்தி தேடுவது அவசியமெனக் கூறல்.

௧. நீங்கள் மனுஷர் காணும்பொருட்டாய் அவர்களுக்குமுன்பாக உங்கள் தருமத்தைச் செய்யாதபடி சாவதானமாயிருங்கள்; செய்தால், பரமண்டலத்திலுள்ள உங்கள் பிதாவினிடத்தில் ஒரு பலனையும் பெறமாட்டீர்கள்.

௨. ஆதலால் கபடிகள், மனுஷரால் புகழப்படும்படி, ஆலயங்களிலும், வீதிகளிலுஞ் செய்வதுபோல நீயும் தருமஞ்செய்யும்பொழுது உனக்கு முன்பாகத் தாரை ஊதுவிக்கவேண்டாம்; அவர்கள் தங்கள் பலனைப் பெற்றார்களென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩. உன் தருமம் அந்தரங்கமாயிருக்கும்படி, நீ தருமஞ்செய்யும்பொழுது, உன் வலக்கை செய்வதை உன் இடக்கை அறியலாகாது.

௪. அப்பொழுது அந்தரங்கத்திலுள்ளதைப் பார்க்கிற உன் பிதா, தாமே பிரத்தியட்சமாய் உனக்குப் பலனளிப்பார்.

௫. நீ பிரார்த்தனை செய்யும்பொழுது கபடிகளைப் போலிருக்கலாகாது; அவர்கள் ஆலயங்களிலும் வீதிகளின் சந்திகளிலும் நின்று, மனுஷர் காணும்படி பிரார்த்தனை செய்ய விரும்புகிறார்கள்; அவர்கள் தங்களுடைய பலனைப் பெற்றார்களென்று, மெய்யாய் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௬. நீ பிரார்த்தனை செய்யும்பொழுது, உன் உள்ளறையில் பிரவேசித்து, அதின் கதவைப் பூட்டின பின்பு, அந்தரங்கத்திலுள்ள உன் பிதாவை நோக்கிப் பிரார்த்தனைசெய்; அப்பொழுது அந்தரங்கத்திலுள்ளதைப் பார்க்கிற உன் பிதா, பிரத்தியட்சமாய் உனக்குப் பலனளிப்பார்.

௭. ஆதலால் பிரார்த்தனைசெய்யும்பொழுது, நீங்கள் அஞ்ஞானிகளைப்போல் வீணாய் வசனிக்கலாகாது; அவர்கள் தாங்கள் அதிகமாய் வசனிக்கிறதினிமித்தங் கேட்கப்படுவோமென்று நினைக்கிறார்கள்.

௮. நீங்கள் அவர்களைப்போலச் செய்யாதிருங்கள்; நீங்கள் உங்கள் பிதாவினிடத்தில் வேண்டுதல் செய்யுமுன், உங்களுக்கு இன்னது வேண்டுமென்று அவர் அறிந்திருக்கிறாரே.

௯. ஆதலால் நீங்கள் இவ்விதமாய்ப் பிரார்த்தனை பண்ணுங்கள். பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக.

௰. உம்முடைய இராச்சியம் வருவதாக; உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறது போலப் பூமண்டலத்திலேயுஞ் செய்யப்படுவதாக.

௰௧. இன்றைக்கு எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை எங்களுக்குத் தாரும்.

௰௨. எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறதுபோல, நீர் எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னித்தருளும்.

௰௩. நாங்கள் சோதனையில் பிரவேசியாதபடி செய்து, தீமையினின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும்; இராச்சியமும், வல்லமையும், மகிமையுஞ் சதாகாலங்களிலும் உமக்கே உரியவைகள். ஆமென்.

௰௪. மனுஷர் செய்த தப்பிதங்களை நீங்கள் மன்னிப்பீர்களானால், உங்கள் பரமபிதாவும் உங்களுக்கு மன்னிப்பார்.

௰௫. மனுஷர் செய்த தப்பிதங்களை நீங்கள் மன்னியாதிருப்பீர்களாகில், உங்கள் பிதாவும் உங்கள் தப்பிதங்களை மன்னியாதிருப்பார்.

௰௬. மேலும், நீங்கள் உபவாசம்பண்ணும்பொழுது, கபடிகளைப்போல் முகவாட்டத்தைக் காட்டவேண்டாம்; அவர்கள் தாங்கள் உபவாசமாயிருப்பதை மனுஷர் காணும்படி, தங்கள் முகங்களை வாடப்பண்ணுகிறார்கள்; அவர்கள் தங்களுடைய பலனைப் பெற்றார்களென்று, நான் மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௭. நீ உபவாசம்பண்ணும்பொழுது, அந்த உபவாசிப்பு மனுஷருக்குக் காணப்படாமல், அந்தரங்கத்திலுள்ள உன் பிதாவுக்கே காணப்படும்படி, உன் தலைக்கு எண்ணெய் பூசி, உன் முகத்தைக் கழுவக்கடவாய்.

௰அ. அப்பொழுது அந்தரங்கத்திலுள்ளதைப் பார்க்கிற உன் பிதா, வெளிப்படையாய் உனக்குப் பலனளிப்பார்.

௰கூ. பூச்சியும், துருவுங் கெடுத்தும், திருடர் கன்னமிட்டுத் திருடியுமிருக்கிற பூமியில், உங்களுக்காகப் பொக்கிஷங்களை நீங்கள் கூட்டிவையாதிருங்கள்.

உ௰. பூச்சியாயினும், துருவாயினும், கெடுக்காமலும், திருடர் கன்னமிட்டுத் திருடாமலுமிருக்கிற பரமண்டலத்தில் உங்களுக்காகப் பொக்கிஷங்களைக் கூட்டிவையுங்கள்.

உக. உங்கள் பொக்கிஷம் எங்கேயோ, அங்கே உங்கள் இருதயமும் இருக்கும்.

உஉ. கண்ணானது சரீரத்திற்கு விளக்கு; ஆதலால் உன் கண் துலக்கமாயிருந்தால், உன் சரீரம் முழுவதும் ஒளிபெறும்.

உ௩. உன் கண் துலக்கமில்லாதிருந்தால், உன் சரீரம் முழுவதும் இருள் அடைந்திருக்கும்; உன்னிலுள்ள ஒளி இருளாயிருந்தாலோ, அந்த இருள் எவ்வளவு பெரிது!

உச. ஒருவன் இரண்டு எசமான்களுக்கு ஊழியஞ்செய்யமாட்டான்; ஒருவனை அவன் பகைத்து, மற்றவனை நேசிப்பான்; அல்லது ஒருவனைப் பற்றிக்கொண்டு, மற்றவனை அலட்சியம்பண்ணுவான்; நீங்கள் தேவனையும், மம்மோனையும் சேவிக்கமாட்டீர்கள்.

உரு. ஆதலால் உங்கள் சீவனைக் குறித்து, எதைப் புசிப்போம்? எதைக் குடிப்போம்? என்றும், உங்கள் சரீரத்தைக்குறித்து, எதை உடுப்போம்? என்றும் நீங்கள் கவலைப்படாதிருங்களென்று நான் உங்களுக்

குச் சொல்லுகிறேன்; ஆகாரத்திலுஞ் சீவனும், உடையிலுஞ் சரீரமும் முக்கியமல்லவா?

௨௬. ஆகாயத்துப் பறவைகளை நோக்கிப் பாருங்கள்; அவைகள் விதைக்கிறதுமில்லை; அறுக்கிறதுமில்லை; களஞ்சியங்களிற் கூட்டிவைக்கிறதுமில்லை; அவைகளையும் உங்கள் பரமபிதாவே போஷிக்கிறார்; அவைகளிலும் நீங்கள் மேன்மையுள்ளவர்களல்லவா?

௨௭. கவலைப்படுகிறதினால் உங்களில் ஒருவன் தன் ஆயுளுக்கு ஒரு சணகாலமாயினும் கூட்டுவானா?

௨௮. உடைக்காக நீங்கள் கவலைப்படுகிறதென்ன? வெளியிலுள்ள லீலிபுஷ்பங்கள் எப்படி வளருகின்றன; அவைகளை உற்றுப்பாருங்கள். அவைகள் வருந்துகிறதுமில்லை; நூற்கிறதுமில்லை.

௨௯. ஆகிலும் மிகுந்த மகிமைபொருந்திய சலோமோனும் அவைகளில் ஒன்றைப்போலாகிலும் அலங்கரிக்கப்படவில்லையென்று, நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௰. ஆதலால் அற்பவிசுவாசிகளே, ஒருநாள் வளருகிறதுமாய், மறுநாள் அடுப்பிற் போடப்படுகிறதுமாயிருக்கிற பூண்டுகளைத் தேவன் இவ்விதமாய் அலங்காரப்படுத்துகிறாராகில், மிகவும் அதிகமாய் உங்களுக்கு உடுத்துவாரல்லவா?

௩௧. ஆதலால் நாம் எதைப் புசிப்போமென்றும், எதைக் குடிப்போமென்றும், எதை உடுப்போமென்றும் நீங்கள் கவலைப்படாதிருங்கள்; அஞ்ஞானிகள் இவைகள் எல்லாவற்றையுந் தேடுவார்கள்.

௩௨. இவைகளெல்லாம் உங்களுக்கு வேண்டியவைகளென்பது உங்கள் பரமபிதாவுக்குத் தெரியும்.

௩௩. முதல் தேவனுடைய இராச்சியத்தையும், அவருடைய நீதியையுந் தேடுங்கள்; அப்பொழுது

இவைகளெல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப் படும்.

௩௪. ஆதலால் நாளையினிமித்தங் கவலைப்படாதி ருங்கள்; நாளைத்தினம், தன்னிமித்தம் தானே கவ லைப்படும்; அந்தந்த நாளைக்கு அதினதின் தீமையே போதும்.

~~~~~~~~~~~~~~

# எ. அதிகாரம்.

க. பிறர்மேற் குற்றம்பாரிப்பதை விலக்கல்: எ. பிரார்த்தனை செய்யும்படி போ தித்தல்: ௰௩. இடுக்கமான வாசலினாலே பிரவேசிக்கும்படி உணர்த்தல்: ௰௫. கள்ளத்தீர்க்கதரிசிகளைக் குறித்து எச்சரிக்கைப்படுத்தல்: உக. தேவனு டைய சித்தத்தின்படி நடப்பது அவசியமெனக்காட்டல்: உச. புத்திமானுக் கும் புத்தியீனனுக்கும் ஏற்ற ஒப்பனையைச் சொல்லல். உஅ. கிறிஸ்து தாம் சொல்லத்தொடங்கிய உபதேசத்தை முடித்தல்.

க. நீங்கள் குற்றஞ் சுமத்தப்படாமல் இருக்க வேண்டில், பிறர்மேல் குற்றஞ்சுமத்தவேண்டாம்; நீங்கள் குற்றஞ் சுமத்துவதுபோலக் குற்றஞ் சுமத்தப் படுவீர்கள்.

உ. நீங்கள் அளக்கும் அளவினால், உங்களுக்கும் அளப்பார்கள்.

௩. உன் கண்ணிலுள்ள உத்திரத்தை உணராமல், உன் சகோதரனுடைய கண்ணிலிருக்கிற சிராயைப் பார்க்கிறதென்ன?

௪. உத்திரம் உன் கண்ணிலிருக்க, நீ உன் சகோ தரனை நோக்கி, உன் கண்ணிலுள்ள சிராயை எடுத் துவிடுகிறேன், இடங்கொடு என்று சொல்வதெ ன்ன?

௫. கபடியே, முன்பு உன் கண்ணிலுள்ள உத்திர த்தை நீக்கிவிடு; அப்பொழுது உன் கண் தெளிய—
~~~~~~~~~~~~~~

நீ உன் சகோதரனுடைய கண்ணிலுள்ள சிராயை எடுத்துவிடுவாய்.

சு. நீங்கள் நாய்களுக்குப் பரிசுத்தமானதை இடாதிருங்கள்; பன்றிகளுக்கு முன் உங்கள் முத்துக்களைப் போடாதிருங்கள்; இவைகள் அந்த முத்துக்களைத் தங்கள் கால்களால் உழக்கி, திரும்பி உங்களைப் பீறும்.

எ. வேண்டிக்கொள்ளுகிற எவனும், வாங்கிக்கொள்ளுகிறான்; தேடுகிறவன், கண்டடைகிறான்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்.

அ. ஆதலால் வேண்டிக்கொள்ளுங்கள்; உங்களுக்குக் கொடுக்கப்படும். தேடுங்கள்; கண்டடைவீர்கள். தட்டுங்கள்; உங்களுக்குத் திறக்கப்படும்.

கூ. உங்களுக்குள் எந்த மனுஷனாயினும், தன்னிடத்தில் அப்பங்கேட்கிற தன் மகனுக்குக் கல்லைக் கொடுப்பானா?

ய. மீனை அவன் கேட்டால், அவனுக்குப் பாம்பைக் கொடுப்பானா?

யக. தீயராகிய நீங்களே உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்திருக்க—பரமண்டலத்திலுள்ள உங்கள் பிதா, தம்மை வேண்டிக்கொள்பவர்களுக்கு மிகவும் அதிகமாய் நன்மைகளைக் கொடுப்பாரல்லவா?

யஉ. ஆதலால் மனுஷர் உங்களுக்குச் செய்யும்படி நீங்கள் விரும்புகிறவைகளெவைகளோ, அவைகளையே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்; இதுவே நியாயப்பிரமாணமும், தீர்க்கதரிசனங்களுமாம்.

யரு. நீங்கள் இடுக்கமான வாசலால் பிரவேசியுங்கள்; நாசத்துக்குப் போகிற வாசல் விரிவுள்ளது; வழி விசாலம்; அதினால் பிரவேசிக்கிறவர்கள் அநேகர்.

௰௪. சீவனுக்குப் போகிற வாசல் எவ்வளவு இடுக்கம், வழி எவ்வளவு நெருக்கம்; சிலர்மாத்திரம் அதைக் கண்டடைகிறார்கள்.

௰௫. ஆட்டின் வேஷத்தையும், பீறுகிற சோனாய்களின் உள்ளத்தையுமுடையவர்களாய், உங்களிடத்தில் வருகிற கள்ளத் தீர்க்கதரிசிகளைக் குறித்துச் சாவதானமாயிருங்கள்.

௰௬. நீங்கள் அவர்களுடைய கனிகளினால் அவர்களை அறிவீர்கள்; முட்செடிகளில் திராட்சப்பழங்களையும், முட்பூண்டுகளில் அத்திப்பழங்களையும் பறிக்கிறவர்களுண்டா?

௰௭. அப்படியே நல்ல மரங்களெல்லாம் நல்ல கனிகளைக் கொடுக்கும்; கெட்டமரமோ கெட்ட கனிகளைக் கொடுக்கும்.

௰௮. நல்லமரங் கெட்டகனிகளையும், கெட்ட மரம் நல்ல கனிகளையுங் கொடுக்கமாட்டாது.

௰௯. நல்ல கனிகளைக் கொடாத மரங்களெல்லாந் தறிக்கப்பட்டு, அக்கினியிலே போடப்படும்.

உ௰. ஆதலால் நீங்கள் அவர்களுடைய கனிகளினால் அவர்களை அறியலாம்.

உக. என்னை நோக்கி, கர்த்தாவே, கர்த்தாவே, என்று சொல்லுகிற எவனுமல்ல; பரமண்டலத்திலுள்ள என் பிதாவுடைய சித்தத்தின்படி செய்கிறவனே பரமராச்சியத்தில் பிரவேசிப்பான்.

உஉ. அந்நாளில் அநேகர் என்னை நோக்கி, கர்த்தாவே, கர்த்தாவே, உமது நாமத்தினாலே நாங்கள் தீர்க்கதரிசனஞ் சொன்னோமல்லவோ? உமது நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்தினோமல்லவோ? உமது நாமத்தினால் அநேக ஆச்சரியமான கிரியைகளைச் செய்தோமல்லவோ? என்பார்கள்.

உ௩. அப்பொழுது நான் அவர்களை நோக்கி, நான் ஒருபொழுதும் உங்களை அறியவில்லை; துர்க்கிரியைக்காரரே, நீங்கள் என்னைவிட்டுப் போங்களென்பேன்.

உ௪. ஆதலால் நான் சொல்லிய இவ்வாக்குகளைக் கேட்டு, இவைகளின்படி செய்கிறவனெவனோ, அவனைக் கன்மலையின்மேல் தன் வீட்டைக் கட்டின புத்தியுள்ள மனுஷனுக்கு ஒப்பிடுவேன்.

உ௫. பெருமழை சொரிந்தும், பெருவெள்ளம் வந்தும், காற்றுகள் அடித்து அந்த வீட்டின்மேல் மோதியும், அதின் அத்திபாரங் கன்மலையின்மேற் போடப்பட்டபடியால், அது விழவில்லை.

உ௬. நான் சொல்லிய இவ்வாக்குகளைக் கேட்டு, இவைகளின்படி செய்யாதவனெவனோ, அவன், மணலின்மேல் தன் வீட்டைக் கட்டின புத்தியீனனுக்கு ஒப்பிடப்படுவான்.

உஎ. பெருமழை சொரிந்து, பெருவெள்ளம் வந்து, காற்றுகள் அடித்து அந்த வீட்டின்மேல் மோதியபொழுது, அது விழுந்தது; முழுவதும் அழிந்து போயிற்றென்றார்.

உ௮. யேசு இவ்வாக்குகளைச் சொல்லி முடித்தபொழுது, அவர் வேதபாரகரைப்போலல்ல, அதிகாரமுடையவராய் அவர்களுக்கு உபதேசம்பண்ணினபடியால்,

உ௯. சனங்கள் அவருடைய உபதேசத்தைக் குறித்துப் பிரமித்தார்கள்.



# அ. அதிகாரம்.

க. குஷ்டரோகியைச் சொஸ்தப்படுத்தல்: ரு. நூற்றுவருக்கதிபதியின் பணிவிடைக்காரனைச் சொஸ்தப்படுத்தல்: ௰ச. பேதுருவின் மாமியைச் சொஸ்தப்படுத்தல்: ௰ரு. வெகு சனங்களைச் சொஸ்தப்படுத்தல்: ௰அ. கிறிஸ்து தம்மைப் பின்செல்லக் கட்டளையிடல்: உரு. கடற்கொந்தளிப்பை அமர்த்தல்: உஅ. பிசாசுகளைத் துரத்தல்.

க. அவர் மலையினின்று இறங்கினபொழுது, திரளான சனங்கள் அவரைப் பின்சென்றார்கள்.

உ. அப்பொழுது குஷ்டரோகி ஒருவன் வந்து அவரை வணங்கி, கர்த்தாவே, உமக்குச் சித்தமானால், நீர் என்னைச் சுத்திகரிக்கக்கூடுமென்றான்.

௩. யேசு தமது கையை நீட்டி, அவனைத் தொட்டு, எனக்குச் சித்தமுண்டு, நீ சுத்தமாவாயாகவென்றார்; உடனே அவன் குஷ்டரோகம் நீங்கிற்று.

ச. பின்பு யேசு, நீ இதை ஒருவனுக்குஞ் சொல்லாதபடி சாவதானமாயிரு; போய், ஆசாரியனுக்கு உன்னைக் காண்பித்து, அவர்களுக்குச் சாட்சியாக, மோசே விதித்த காணிக்கையைச் செலுத்துவாயாக என்றார்.

ரு. யேசு கப்பர்நாகூமில் பிரவேசித்தபின்பு, நூறுசேவகருக்கதிபதி ஒருவன் அவரிடத்தில் வந்து,

சு. அவரை நோக்கி, கர்த்தாவே, என் பணிவிடைக்காரன் திமிர்வாதமுள்ளவனாய், வீட்டிலே கிடந்து, மிகவும் உபாதிப்படுகிறானென்று வேண்டிக்கொண்டான்.

எ. யேசு அவனை நோக்கி, நான் வந்து அவனைச் சொஸ்தப்படுத்துவேனென்று சொல்ல—

அ. நூறுசேவகருக்கதிபதி, கர்த்தாவே, நீர் என் வீட்டிற் பிரவேசிப்பதற்கு நான் பாத்திரனல்ல;

ஒரு வாக்குமாத்திரஞ் சொன்னால், என் பணிவிடைக்காரன் சொஸ்தமாவான்.

௯. நான் அதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டவனாயினும், எனக்குக் கீழ்ப்பட்ட சேவகரில் ஒருவனைப் போவென, போகிறான்; மற்றொருவனை வாவென, வருகிறான்; என் பணிவிடைக்காரனை இதைச் செய்யென, செய்கிறானென்றான்.

௰. யேசு அதைக் கேட்டு, ஆச்சரியப்பட்டு, பின் சென்றவர்களை நோக்கி, இஸ்ரவேலருக்குள்ளும் இப்படிப்பட்ட விசுவாசத்தை நான் காணவில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௧. அநேகர் கிழக்கிலும்,மேற்கிலுமிருந்து வந்து பரம இராச்சியத்தில் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களோடே பந்தியிருப்பார்கள்.

௰௨. இராச்சியத்தின் பிள்ளைகளோ, காரிருளிலே புறம்பாகத் தள்ளப்படுவார்கள்; அங்கே அழுகையும், பற்கடிப்புமுண்டாகுமென்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௰௩. பின்பு யேசு நூறுசேவகருக்கதிபதியை நோக்கி, போ; உன் விசுவாசத்தின்படி உனக்காகக்கடவதென்றார். அந்த நாழிகையில் அவனுடைய பணிவிடைக்காரன் சொஸ்தம் அடைந்தான்.

௰௪. யேசு பேதுருவின் வீட்டிலே சேர்ந்து, அவனுடைய மாமி சுரமாய்க் கிடக்கிறதைக் கண்டார்.

௰௫. அவர் அவள் கையைத் தொட—சுரம் அவளை நீங்கிற்று; அவள் எழுந்திருந்து, அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.

௰௬ அஸ்தமனமானபொழுது, பிசாசுபிடித்திருந்த அநேகரை அவரிடத்திற் கொண்டுவந்தார்கள். அவர் ஒரு வாக்கினால் அந்த ஆவிகளைத் துரத்தி, பிணியாளிகளெல்லாரையுஞ் சொஸ்தப்படுத்தினார்.

௰எ. இப்படியே "அவரே நம்முடைய பெலவீனங்களை ஏற்றுக்கொண்டு, நம்முடைய துக்கங்களைத் தாங்கினார்" என்று, தீர்க்கதரிசியாகிய ஏசாயா சொல்லிய வாக்கு நிறைவேறிற்று.

௰அ. பின்பு யேசு அநேக சனங்கள் தம்மைச் சூழ்ந்திருக்கக் கண்டு, அக்கரைக்குப் போகக் கட்டளையிட்டார்.

௰௯. அப்பொழுது வேதபாரகன் ஒருவன் வந்து அவரை நோக்கி, போதகரே, நீர் எங்கேபோனாலும் நான் உம்மைப் பின்பற்றுவேனென்று சொல்ல—

௨௰. யேசு அவனை நோக்கி, நரிகளுக்குக் குகைகளும், ஆகாயத்துப்பறவைகளுக்குக் கூடுகளுமுண்டு; மனுபுத்திரனுக்கோ, தலைசாய்க்கவும் இடமில்லை என்றார்.

௨௧. பின்னும் அவருடைய சீஷரில் வேறொருவன் அவரை நோக்கி, கர்த்தாவே, முன்பு நான் போய் என் பிதாவை அடக்கம்பண்ண உத்தரவு தாருமென்று சொல்ல—

௨௨. யேசு அவனைப் பார்த்து, நீ என்னைப் பின்பற்றிவா; மரித்தோர் தங்கள் மரித்தோரை அடக்கம்பண்ணக்கடவர்களென்றார்.

௨௩. அவர் படவில் ஏறுகிறபொழுது, அவருடைய சீஷர் அவரைப் பின்சென்றேறினார்கள்.

௨௪. அப்பொழுது படவு திரைகளினாலே மூடப்படத்தக்கதாகக் கடலிலே பெருங்காற்றுண்டாயிற்று.

௨௫. அவர் நித்திரையாயிருந்தார்; அவருடைய சீஷர்கள் அவரிடத்திற் சேர்ந்து, அவரை எழுப்பி, கர்த்தாவே, எங்களை இரட்சியும்; மாண்டுபோகிறோமே என்று சொல்ல—

௨௬. அவர் அவர்களை நோக்கி, அற்பவிசுவாசிகளே, ஏன் பயப்படுகிறீர்களென்று சொல்லி, எழுந்து காற்றுகளையும், கடலையுங் கடிந்துகொள்ள, மகா அமைதியுண்டாயிற்று.

௨௭. அந்த மனுஷர் மிகவும் ஆச்சரியப்பட்டு, காற்றுகளுங் கடலும் இவருக்கு அமைந்திருக்கின்றனவே; இவர் எப்படிப்பட்டவர்? என்றார்கள்.

௨௮. பின்பு அவர் அக்கரையிலுள்ள கெர்கேசேனர் தேசத்தில் சேர்ந்தார்; அவ்வழியாய் ஒருவருஞ் செல்லாமலிருக்கும்படி, பிசாசு பிடித்த மனுஷர் இரண்டுபேர் மிகுந்த துஷ்டராய், பிரேதவறைகளினின்று புறப்பட்டு, அவருக்கெதிராக வந்து,

௨௯. ஆ! யேசுவே, தேவனுடைய குமாரனே, எங்களுக்கும் உமக்குமென்ன? காலம் வருமுன்னே எங்களை யாதனைப்படுத்தும்படி இங்கே வந்தீரா? என்று கூப்பிட்டார்கள்.

௩௰. அவர்களுக்குச் சற்றே தூரமாக அநேகம் பன்றிகள் கூட்டமாய் மேய்ந்துகொண்டிருந்தன.

௩௧. பிசாசுகள், நீர் எங்களைத் துரத்தினால் நாங்கள் அந்தப் பன்றிக்கூட்டத்தில் பிரவேசிக்கும்படி உத்தரவு தாருமென்று, அவரை வேண்டிக்கொண்டன.

௩௨. அவர் போங்களென்று அவைகளுக்குச் சொல்ல—உடனே அவைகள் புறப்பட்டுப் பன்றிக்கூட்டத்திற் பிரவேசித்தன; பின்பு பன்றிகளெல்லாம் மேட்டிலிருந்து கடலிலே பாய்ந்து, நீர்களிலே மாண்டுபோயின.

௩௩. அவைகளை மேய்த்தவர்கள் ஓடி, பட்டணத்திற் சென்று, பிசாசு பிடித்தவர்களுடைய செய்தியையும், மற்றெல்லாவற்றையுந் தெரிவித்தார்கள்.

௩௪. அப்பொழுது பட்டணத்தார் யாவரும் யேசுவைச் சந்திக்கப் புறப்பட்டு, அவனைக் கண்டு; தங்கள் எல்லைகளை விட்டுப் போகும்படி அவனை வேண்டிக்கொண்டார்கள்.

# ௯. அதிகாரம்.

க. கிறிஸ்து திமிர்வாதக்காரனைச் சொஸ்தப்படுத்திப் பாவத்தை மன்னித்தல்: ௯. மத்தேயு அழைக்கப்படல்: ௰. அவன் வீட்டில் விருந்து நடத்தல்: ௰௪. உபவாசத்தை விலக்கும் நியாயத்தைக் காட்டல்: ௨௰. பிரதரவியாதியை நீக்கல்: ௨௩. அதிபதியின் மகளை மரணத்தினின்று உயிர்ப்பித்தல்: ௨௭. குருடர் இருவருக்குப் பார்வையைக் கொடுத்தல்: ௩௩. பிசாசுபிடித்த ஊமையைச் சொஸ்தப்படுத்தல்: ௩௫. திக்கற்றவர்கள்மேல் இரங்கல்.

க. அப்பொழுது அவர் படவிலேறி, இக்கரைப்பட்டு, தம்முடைய பட்டணத்திற்கு வந்தார்.

௨. அங்கே படுக்கையின்மேல் கிடந்த திமிர்வாதக்காரனொருவனை அவரிடத்திற் கொண்டுவந்தார்கள்; இயேசு அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி, மகனே, திடமாயிரு; உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டனவென்றார்.

௩. அதினால் வேதபாரகரிற் சிலர், இவன் தேவதூஷணஞ் சொல்லுகிறானென்று எண்ணிக்கொண்டார்கள்.

௪. யேசு அவர்களுடைய சிந்தனைகளை அறிந்து, நீங்கள் உங்கள் இருதயங்களிலே துர்ச்சிந்தனை கொள்ளுகிறதென்ன?

௫. உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டன வென்று சொல்லுகிறதோ? எழுந்திருந்து நடவென்று சொல்லுகிறதோ? எது எளிது?

௬. மனுபுத்திரன் பூமண்டலத்தில் பாவங்களை மன்னிக்கிறதற்கு அதிகாரமுடையவன் என்பதை

நீங்கள் அறியத்தக்கதாகவென்றுசொல்லி, திமிர்வா தக்காரனை நோக்கி, நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போவென்று சொல்ல—

எ. அவன் எழுந்து தன் வீட்டுக்குப் போனான்.

அ. சனங்கள் இதைக் கண்டு, ஆச்சரியப்பட்டு, மனுஷருக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தை அருளிய தேவனைத் துதித்தார்கள்.

௯. யேசு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப்போகையில், ஆயத்துறையில் மத்தேயுவென்னும் நாமமுள்ள ஒருவன் இருக்கக்கண்டு, அவனை நோக்கி, நீ என்னைப் பின்பற்றிவாவென்றார்; அவன் எழுந்து, அவரைப் பின்பற்றினான்.

௰. பின்பு யேசு வீட்டிலே போசனபந்தியிருக்கையில், அநேகம் ஆயக்காரரும், பாவிகளும் வந்து, அவரோடும், அவர் சீஷரோடும் பந்தியிருந்தார்கள்.

௰க. பரிசேயர் அதைக் கண்டு, அவருடைய சீஷரை நோக்கி, உங்கள் போதகர் ஆயக்காரரோடும், பாவிகளோடும் போசனம்பண்ணுகிறதென்ன? என்றார்கள்.

௰உ. யேசு அதைக் கேட்டு, அவர்களை நோக்கி, சொஸ்தமுள்ளவர்களுக்கல்ல, வியாதியுள்ளவர்களுக்கே வைத்தியன் வேண்டும்.

௰௩. பலியிலும் இரக்கத்தை விரும்புகிறேனென்பதின் அருத்தத்தை நீங்கள் போய்க் கற்றுக்கொள்ளுங்கள். நீதிமான்களையல்ல, பாவிகளையே மனந்திரும்புகிறதற்கு அழைக்க வந்தேனென்றார்.

௰௪. அப்பொழுது யோவானுடைய சீஷர் அவரிடத்தில் வந்து, நாங்களும், பரிசேயரும், அடிக்கடி உபவாசம்பண்ணியிருக்கிறோம்; உம்முடைய சீஷ

ரோ, உபவாசம்பண்ணுமலிருக்கிறதென்னவென்று கேட்க—

௰௫. யேசு அவர்களிடத்தில் மணவாளனுடைய தோழர், மணவாளன் தங்களோடிருக்கிறபொழுது துயரப்படுவார்களா? மணவாளன் அவர்களை விட்டு நீங்கப்படுங்காலம் வரும்; அப்பொழுது உபவாசம் பண்ணுவார்கள்.

௰௬. ஒருவனுங் கோடித்துண்டைப் பழையவஸ்திரத்தோடே இணைக்கமாட்டான்: இணைத்தால் அதனோடே இணைத்ததுண்டு அவ்வஸ்திரத்தை விட்டு எடுபட்டுப்போக—அதிக பொத்தலுண்டாகும்.

௰௭. பழைய துருத்திகளில் புதிய திராட்சரசத்தை வைக்கமாட்டார்கள்: வைத்தால் துருத்திகள் கிழிந்துபோம்; ரசமுஞ் சிந்திப்போம்; துருத்திகளுங் கெட்டுப்போம்; புதியரசத்தைப் புதிய துருத்திகளில் வார்த்துவைத்தால், இரண்டுங் காக்கப்படுமென்றார்.

௰௮. அவர் இவைகளை அவர்களுடன் பேசின சமயத்தில், அதிபதி ஒருவன் வந்து, அவரை வணங்கி, இந்நேரத்தில் என் மகள் இறந்துபோனாள்: நீர் வந்து அவள் மேல் உம்முடைய கையை வையும்; அப்பொழுது அவள் சீவிப்பாளென்றான்.

௰௯. யேசு எழுந்து, தம்முடைய சீஷரோடும் அவன் பின்னே போனார்.

௨௰. அவர் போகையில், பன்னிரண்டு வருஷமாகப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரி வந்து,

௨௧. இவருடைய வஸ்திரத்தைமாத்திரந் தொட்டால், சொஸ்தமடையலாமென்று தன் உள்ளத்தில் எண்ணி, அவருக்குப் பின்னே போய், அவருடைய வஸ்திரத்தின் விளிம்பைத் தொட்டாள்.

௨௨. யேசு திரும்பி, அவளைக் கண்டு, மகளே, திடமாயிரு; உன் விசுவாசம் உன்னைச் சொஸ்தமாக்கிற்றென்றார். அந்நேரமே அந்த ஸ்திரி சொஸ்தமடைந்தாள்.

௨௩. பின்பு யேசு அதிபதியின் வீட்டிலே சேர்ந்து, வாத்தியக்காரரையும், இரைகிற சனங்களையுங் கண்டு,

௨௪. அவர்களை நோக்கி, விலகுங்கள்; இந்தக் கன்னி இறந்துபோகவில்லை; நித்திரைசெய்கிறாளென்று சொல்ல—அவர்கள் அவரைப் பரிகாசம் பண்ணினார்கள்.

௨௫. சனங்கள் வெளியே அகற்றப்பட்டபின்பு, அவர் உள்ளே போய், அந்தக் கன்னியின் கையைப் பிடிக்க—அவள் எழுந்திருந்தாள்.

௨௬. இந்தக் கீர்த்தி அத்தேசமெங்கும் பரம்பிற்று.

௨௭. யேசு அவ்விடம்விட்டுப்போகையில், குருடர் இருவர் அவர் பின்னே சென்று, தாவீதின் புத்திரனே, எங்கள்மேல் இரங்குமென்று ஓலமிட்டார்கள்.

௨௮. அவர் வீட்டிலே வந்தபின்பு, அந்தக் குருடர் அவரிடத்தில் வந்தார்கள்; யேசு அவர்களை நோக்கி, நான் இப்படிச்செய்ய வல்லவரென்று நீங்கள் விசுவாசிக்கிறீர்களாவென்று கேட்க — ஆம், கர்த்தாவே, விசுவாசிக்கிறோமென்றார்கள்.

௨௯. அப்பொழுது அவர் அவர்களுடைய கண்களைத் தொட்டு, உங்கள் விசுவாசத்தின்படி உங்களுக்காகக்கடவதென்றார்.

௩௰. உடனே அவர்களுடைய கண்கள் திறக்கப்பட்டன; பின்பு யேசு ஒருவருக்குந் தெரியாதபடி சாவதானமாயிருங்களென்று சொல்லி, உறுதியாய் அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

௩௧. அவர்களோ புறப்பட்டு, அத்தேசமெங்கும் அவருடைய கீர்த்தியைப் பிரசித்தம்பண்ணினூர்கள்.

௩௨. அவர்கள் புறப்பட்டமாத்திரத்திலே, பிசாசு பிடித்திருந்த ஊமையன் ஒருவனை அவரிடத்திற் கொண்டுவந்தார்கள்.

௩௩. பிசாசு துரத்தப்பட்டபின்பு, ஊமையன் பேசினூன்; சனங்கள் ஆச்சரியப்பட்டு, இஸரவேலருக்குள் இதைப்போல் ஒருபொழுதுங் காணப்படவில்லையென்றூர்கள்.

௩௪. பரிசேயரோ பிசாசாதிபதியினூல் அவன் பிசாசுகளைத் துரத்துகிறூனென்றூர்கள்.

௩௫. பின்பு யேசு, சகல பட்டணங்களிலும், கிராமங்களிலுஞ் சஞ்சரித்து, அவர்கள் ஆலயங்களில் உபதேசஞ்செய்து, இராச்சியத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, சனங்களுக்குண்டான எந்த வியாதியையும், எந்த நோயையும் நீக்கி, அவர்களைச் சொஸ்தப்படுத்தினூர்.

௩௬. அவர் மிகுந்த சனங்களைப் பார்த்து, மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போல அவர்கள் அலைந்து சிதறுண்டவர்களானபடியினூல், அவர்கள் மேல் மனதுருகி,

௩௭. தம்முடைய சீஷரை நோக்கி, விளைவு மிகுதி, வேலையாட்களோ சிலர்.

௩௮. ஆதலால் அறுப்புக்குத் தலைவர் அரி அரிவதற்கு ஆட்களை அனுப்பும்படி, அவரை வேண்டிக்கொள்ளுங்களென்றூர்.

# ௰. அதிகாரம்.

*௧. அப்போஸ்தலரின் நாமங்களை விவரித்தல்; ௫. பன்னிரண்டு சீஷரை அனுப்பிவிடல்; ௰௬. அவர் படுந்துயரத்தைத் தெரிவித்தல்; ௩௪. கிறிஸ்துவினுடைய உபதேசத்தின் பலனைக் காட்டல்; ௪௰. சீஷரை உபசரிக்கும் பலனைக் குறித்தல்.*

௧. அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷரையுந் தம்மிடத்தில் அழைத்து, அசுத்த ஆவிகளைத் துரத்தவும், சகல வியாதிகளையும் நோய்களையும் நீக்கவும், அவர்களுக்கு அதிகாரங்கொடுத்தார்.

௨. அந்தப் பன்னிரண்டு அப்போஸ்தலரின் நாமங்களாவன: முந்தினவனாகிய பேதுரு என்னப்பட்ட சீமோன், அவனுடைய சகோதரனாகிய அந்திரேயா, செபேதேயுவின் புத்திரன் யாக்கோபு, அவன் சகோதரன் யோவான்,

௩. பிலிப்பு, பர்தொலொமேயு, தோமா, ஆயக்காரனான மத்தேயு, அல்வேயுவின் புத்திரனாகிய யாக்கோபு, ததேயுவென்னும் மறுநாமமுள்ள இலெப்பேயு,

௪. கானானியனாகிய சீமோன், அவரைக் காட்டிக்கொடுத்தவனாகிய யூதாஸ்காரியோத்து என்பவைகளே.

௫. யேசு இந்தப் பன்னிருவரையும் நோக்கி, நீங்கள் புறத்தேசத்தாரிடத்திற் செல்லாமலும்,

௬. ஷமாரியருடைய எந்தப் பட்டணத்திலும், பிரவேசியாமலும், காணமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வமிசத்தாரிடத்திற்கே போங்கள்.

௭. போகும்பொழுது, பரம இராச்சியஞ் சமீபித்ததென்று கூறுங்கள்.

௮. வியாதியுள்ளவர்களைச் சொஸ்தப்படுத்துங்கள்; குஷ்டரோகிகளைச் சுத்தம்பண்ணுங்கள்; மரித்தோ

ரை எழுப்புங்கள்; பிசாசுகளைத் துரத்துங்கள்; நீங்கள் கைம்மாறின்றிப் பெற்றுக்கொண்டீர்கள்; கைம்மாறின்றிக் கொடுங்கள்.

௯. நீங்கள் உங்கள் அரைப்பைகளில் பொன்னையாகிலும், வெள்ளியையாகிலும், செம்பையாகிலும் வைக்கவும், வழிக்காகப் பையையாகிலும், இரண்டு அங்கிகளையாகிலும், பாதரட்சைகளையாகிலும், கோலையாகிலுந் தேடவும் வேண்டாம்.

௰. வேலைக்காரன் தன் ஆகாரத்திற்குப் பாத்திரன்.

௰௧. நீங்கள் எந்தப் பட்டணத்திலும், எந்தக் கிராமத்திலும் பிரவேசிக்கும்பொழுது, அதிலுள்ளவர்களில் பாத்திரவான் இன்னானென்று விசாரித்து, நீங்கள் புறப்படுமளவும் அவ்விடத்திலே தங்குங்கள்.

௰௨. நீங்கள் ஒரு வீட்டில் பிரவேசிக்கும்பொழுது, அதை வாழ்த்துங்கள்.

௰௩. அந்த வீட்டார் பாத்திரராயிருந்தால், நீங்கள் சொல்லிய வாழ்த்து அவர்களிடத்தில் தங்கும்; பாத்திரரல்லாதிருந்தால், அந்த வாழ்த்து உங்களிடத்தில் திரும்பிவரும்.

௰௪. எவ்விடத்தாராயினும் உங்களை அங்கிகரித்துக்கொள்ளாமலும், உங்கள் வாக்குகளுக்குச் செவிகொடாமலுமிருந்தால், நீங்கள் அந்த வீட்டையாகிலும், பட்டணத்தையாகிலும் விட்டுப் புறப்படுகையில், உங்கள் பாதங்களிற் படிந்த தூளை உதறிப்போடுங்கள்.

௰௫. நியாயத்தீர்ப்புநாளில் அந்தப் பட்டணத்தின் நிலைமையிலும், சோதோம், கொமோரா தேசங்களின் நிலைமை சகாயமாகுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௬. பாருங்கள், கோனாய்களுக்குள் ஆடுகளைப் போல், நான் உங்களை அனுப்புகிறேன்; ஆதலால்

நீங்கள் சருப்பங்களைப்போலப் புத்தியுள்ளவர்களும், புருக்களைப்போலக் கபடமற்றவர்களுமாயிருங்கள்.

௰௭. மனுஷரைக்குறித்து நீங்கள் சாவதானமாயிருங்கள்; அவர்கள் உங்களைச் சங்கத்தாரிடத்தில் ஒப்பித்து, தங்கள் ஆலயங்களில் வாரினால் உங்களை அடிப்பார்கள்.

௰௮. என்னிமித்தம், நீங்கள் தேசாதிபதிகளும், இராசாக்களுமானவர்கள் முன்பாக, அவர்களுக்கும் புறத்தேசத்தாருக்குஞ் சாட்சியாகக் கொண்டுபோகப்படுவீர்கள்.

௰௯. அவர்கள் உங்களை ஒப்பிக்குஞ் சமையத்தில், எவ்விதமாய் எதை நாம் சொல்லுவோமென்று நீங்கள் கவலைப்படவேண்டாம்; நீங்கள் பேசவேண்டுவது அந்நேரத்தில் அருளப்படும்.

௨௰. பேசுகிறவர்கள் நீங்களல்ல; உங்கள் பிதாவின் ஆவியானவரே உங்களிலிருந்து பேசுகிறவர்.

௨௧. சகோதரன் தன் சகோதரனையும், பிதா தன் பிள்ளையையும் மரணத்துக்கு ஒப்பிப்பார்கள்; பிள்ளைகள் தங்கள் தங்கள் பெற்றாருக்கு விரோதமாயெழும்பி, அவர்களைக் கொலைசெய்விப்பார்கள்.

௨௨. என் நாமத்தினிமித்தம் நீங்கள் எல்லாராலும் பகைக்கப்படுவீர்கள்; ஆயினும் முடிவுபரியந்தம் நிலைத்திருக்கிறவனே, இரட்சிக்கப்படுவான்.

௨௩. அவர்கள் ஒரு பட்டணத்தில் உங்களைத் துன்பப்படுத்தினால், மறுபட்டணத்துக்கு ஓடிப்போங்கள். நீங்கள் இஸ்ரவேலின் பட்டணங்களெங்குஞ் சுற்றி முடியுமுன், மனுபுத்திரன் வருவானென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௪. சீஷன் தன் குருவிலும், பணிவிடைக்காரன் தன் எசமானனிலும் பெரியவர்களல்ல.

உரு. சீஷன் தன் குருவுக்கும், பணிவிடைக் காரன் தன் எசமானனுக்குஞ் சமமானால் போதும்; வீட்டெசமானனையே பாகால்சேபூலென்று அவர் கள் சொன்னார்களானால், அவருடைய வீட்டாரை எவ்வளவு அதிகமாய்ச் சொல்லுவார்கள்.

உசு. வெளியாக்கப்படாத மறைபொருளில்லை; அறியப்படாத இரகசியமுமில்லை. ஆதலால் நீங் கள் அவர்களுக்குப் பயப்படாதிருங்கள்.

உஎ. நான் இருளில் உங்களுக்குச் சொல்லுவ தை, நீங்கள் ஒளியிலே சொல்லுங்கள்; உங்கள் செ விக்கேறுவதை, நிலாமுற்றங்கள்மேல் நின்று, பிர சித்தப்படுத்துங்கள்.

உஅ. ஆத்துமாவைக் கொலைசெய்ய வல்லமை யில்லாமல், சரீரத்தைமாத்திரங் கொலைசெய்பவர் களுக்கு நீங்கள் பயப்படாதிருங்கள்; ஆத்துமா, சரீரம் இரண்டையும் நரகத்திலே நாசப்படுத்த வல் லவருக்கே பயப்படுங்கள்.

உகூ. ஒரு காசுக்கு இரண்டு அடைக்கலான் குரு விகள் விற்கப்படுமல்லவா? ஆயினும் உங்கள் பிதா வின் அனுமதியின்றி, அவைகளில் ஒன்றுந் தரையி லே விழாது.

௩௰. உங்கள் தலைமயிரெல்லாம் எண்ணப்பட்டி ருக்கின்றன.

௩௧. ஆதலால் பயப்படாதிருங்கள்; அநேகம் அடைக்கலான் குருவிகளைப்பார்க்கிலும், நீங்கள் மேன்மையானவர்கள்.

௩௨. ஆனதால் மனுஷருக்கு முன் என்னை அ றிக்கைபண்ணுகிறவனெவனோ, அவனை நானும் பரமண்டலத்திலுள்ள என் பிதாவின் சமுகத்தில் அறிக்கைபண்ணுவேன்.

௩௩. மனுஷருக்கு முன் என்னை மறுதலிப்பவ னெவனோ, அவனை நானும் பரமண்டலத்திலுள்ள என் பிதாவின் சமுகத்திலே மறுதலிப்பேன்.

௩௪. பூமியின்மேல் சமாதானத்தை வருவிக்க வந்தேனென்று எண்ணிக்கொள்ளாதிருங்கள்; சமாதானத்தையல்ல, கட்கத்தை வருவிக்க வந்தேன்.

௩௫. புத்திரன் தன் பிதாவையும், புத்திரி தன் மாதாவையும், மருமகள் தன் மாமியையும் விரோதிக்கச்செய்யும்படி வந்தேன்.

௩௬. ஒரு மனுஷனுடைய குடும்பத்தாரே அவனுக்குச் சத்துருக்கள்.

௩௭. என்னைப்பார்க்கிலும் பிதாவையாவது, மாதாவையாவது அதிகமாய் நேசிக்கிறவன் எனக்குப் பாத்திரனல்ல; என்னைப்பார்க்கிலும் புத்திரனையாகிலும், புத்திரியையாகிலும், அதிகமாய் நேசிக்கிறவன் எனக்குப் பாத்திரனல்ல.

௩௮. தன் சிலுவையை எடுத்துக்கொண்டு, என் பின்னே செல்லாதவன் எனக்குப் பாத்திரனல்ல.

௩௯. தன் பிராணனைக் காக்கிறவன் அதை இழந்துபோவான்; என்னிமித்தந் தன் பிராணனை இழந்துபோகிறவன் அதைக் காப்பான்.

௪௰. உங்களை அங்கிகரிக்கிறவன் என்னையும் அங்கிகரிக்கிறான்; என்னை அங்கிகரிக்கிறவன் என்னை அனுப்பினவரையும் அங்கிகரிக்கிறான்.

௪க. தீர்க்கதரிசியென்று ஒரு தீர்க்கதரிசியை அங்கிகரிக்கிறவன் தீர்க்கதரிசியின் பலனைப் பெறுவான்; நீதிமானென்று ஒரு நீதிமானை அங்கிகரிக்கிறவன் நீதிமானின் பலனைப்பெறுவான்.

௪உ. இச்சிறியவர்களில் ஒருவன் என் சீஷனென்று அவனுக்கு ஒரு கலசந் தண்ணீர் குடிக்கக்கொ

டுக்கிறவன், தன் பலனை இழந்துபோகானென்று
மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

## ௰௧. அதிகாரம்.

க. சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்தக் கிறிஸ்து பிரயாணஞ் செய்தல்: உ. யோவான் சீஷரைக் கிறிஸ்துவினிடத்தில் அனுப்பல்: எ. கிறிஸ்து யோவானைக் குறித்துச் சாட்சியிடல்: ௰௬. கிறிஸ்துவையும் யோவானையுங்குறித்துச் சனங்கள் கொண்ட எண்ணந் தெரிவித்தல்: உ௰. கோராசின் முதலிய பட்டணங்களின்மேல் கிறிஸ்து புலம்பல்: உ௫. கிறிஸ்து தன் பிதாவாகிய தேவனை வாழ்த்துதல்: உ௮. வருந்திய சனங்களை அழைத்தல்.

க. இவ்விதமாக யேசு தம்முடைய பன்னிரண்டு
சீஷருக்குங் கட்டளைகொடுத்து, முடித்தபின்பு, அ
வர்கள் பட்டணங்களில் உபதேசிக்கவும், பிரசங்
கிக்கவும், அவ்விடம்விட்டுப் புறப்பட்டார்.
உ. காவலிலிருந்த யோவான் கிறிஸ்து செய்த
கிரியைகளின் செய்தியைக் கேள்விப்பட்டு, தன்
சீஷரில் இரண்டுபேரை அனுப்பி,
௩. வருபவர் நீரோ? வேறொருவர் வர நாங்கள்
எதிர்பார்க்கவேண்டுமோ? என்று அவரைக் கேட்
பித்தான்.
ச. அவர்களுக்குத்தரமாக யேசு, நீங்கள் கேட்டுங்
கண்டுமிருக்கிறவைகளை யோவானுக்குப் போய்த்
தெரிவியுங்கள்.
௫. குருடர் பார்வையடைகிருர்கள்; சப்பாணி
கள் நடக்கிருர்கள்; குஷ்டரோகிகள் சுத்தமடைகி
ருர்கள்; செவிடர் கேட்கிருர்கள்; மரித்தோர் எழுப்
பப்படுகிருர்கள்; எளியவர்களுக்குச் சுவிசேஷம்
அறிவிக்கப்படுகின்றது.
௬. என்னில் இடறுண்ணுதவனெவனோ, அவன்
வாழ்வுடையவனென்ருர்.

௭. அவர்கள் போனபின்பு, யேசு, யோவானைக் குறித்துச் சனங்களிடத்திலே, நீங்கள் வனத்தில் எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள்? காற்று அசைக்கும் நாணலையோ?

௮. எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள்? மெல்லிய வஸ்திரங்களைத் தரித்த ஒரு மனுஷனையோ? மெல்லிய வஸ்திரங்களைத் தரித்திருப்பவர்கள் அரசர்மாளிகைகளில் இருக்கிறார்கள்.

௯. எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள்? தீர்க்கதரிசியையோ? ஆம், தீர்க்கதரிசியிலும் அதிக மேன்மையுள்ளவனையேயென்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰. "பாரும், என் தூதனை உமக்கு முன்பாக அனுப்புகிறேன்; அவன் உமக்கு முன்னே போய், உமது வழியை ஆயத்தப்படுத்துவான்" என்று ஒருவனைக்குறித்து எழுதியிருக்கின்றது; அவனே இவன்.

௰௧. ஸ்திரீகளிடத்திலே பிறந்தவர்களில், யோவான்ஸ்நானனிலும் பெரியவன் ஒருவனுந் தோன்றவில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஆனாலும் பரம இராச்சியத்தில் சிறியவனும், அவனிலும் பெரியவனாயிருக்கிறான்.

௰௨. யோவான்ஸ்நானனுடைய காலமுதல் இதுவரைக்கும், பரம இராச்சியம் பலவந்தப்படுகின்றது; பலவந்தம்பண்ணுகிறவர்கள் வலாற்காரமாய் அதைப் பிடித்துக்கொள்ளுகிறார்கள்.

௰௩. யோவான்வரைக்கும், தீர்க்கதரிசிகள் யாவராலும், நியாயப்பிரமாணத்தினாலும், உபதேசந் தெரிவிக்கப்பட்டது.

௰௪. நீங்கள் ஏற்றுக்கொள்ளப் பிரியப்பட்டால், வருபவனாகிய இலீசா இவன்தான்.

ாடு. கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கட வன்.

ாசு. இந்தச் சந்ததியாரை ஆருக்கு ஒப்பிடுவேன்? சந்தைகளிலிருந்து தங்கள் தோழரை நோக்கி, உங் களுக்காக ஊதினேம்,

ாஎ. நீங்கள் கூத்தாடவில்லை; உங்களுக்காகப் புலம்பினேம், நீங்கள் மார்பில் அடிக்கவில்லையெ ன்று சொல்லிக் கூப்பிடுகிற பிள்ளைகளுக்கொப்பா யிருக்கிறார்கள்.

ாஅ. யோவான் வந்து, போசனபானம்பண்ணும லிருந்தான்; அதினல் பிசாசைக் கொண்டிருக்கிற னென்றார்கள்.

ாகூ. மனுபுத்திரன் வந்து, போசனபானம்பண் ணுகிறான்; அதினல் அவர்கள், பாருங்கள், இவன் போசனப்பிரியன் — மதுபானன் — ஆயக்காரருக் கும் பாவிகளுக்குஞ் சிநேகிதனென்று சொல்லுகி றார்கள்; ஆனாலும் ஞானம், தன் பிள்ளைகளால் நீதி யாய் எண்ணப்படுமென்றார்.

உய. அவர் தம்முடைய ஆச்சரியமான செய்கை களில் அநேகஞ் செய்யப்பட்ட பட்டணங்களைக் குறித்து, அவைகளிலுள்ளவர்கள் மனந்திரும்பாத தினிமித்தம், அவைகளைக் கடிந்துகொள்ளத்தொ டங்கி,

உக. ஐயோ! கோராசினே, உனக்கு ஆபத்துவ ரும்; ஐயோ! பேத்சாயிதாவே, உனக்கு ஆபத்துவ ரும்; உங்களுக்குள்ளே நடந்த ஆச்சரியமான கிரி யைகள் தீருசீதோன் நகரங்களிலே செய்யப்பட் டால், அவர்கள் நெடுநாளுக்குமுன் இரட்டைத் தரித்து, சாம்பலிலே இருந்து, மனந்திரும்புவார்கள்.

உஉ. ஆதலால் நியாயத்தீர்ப்புநாளில் உங்கள் நிலை மையிலும், தீருசீதோன் நகரங்களின் நிலைமை சகா

யமாகுமென்று, நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௩. வானபரியந்தம் உயர்த்தப்பட்ட கப்பர்நாகூமே, நீ பாதளபரியந்தந் தாழ்த்தப்படுவாய்; உனக்குள்ளே நடந்த ஆச்சரியமான கிரியைகள் சோதோமில் நடந்ததுண்டானால், அது இந்நாள்வரைக்கும் நிற்குமே.

௨௪. ஆதலால் நியாயத்தீர்ப்புநாளில் உன் நிலைமையிலும், சோதோம் தேசத்து நிலைமை சகாயமாயிருக்குமென்று, நான் உனக்குச் சொல்லுகிறேனென்றார்.

௨௫. அந்தச் சமயத்தில், யேசு, பிதாவே, வானத்துக்கும் பூமிக்கும் கர்த்தாவே, நீர் இவைகளை ஞானவான்களுக்கும், வித்துவான்களுக்கும் மறைத்து, குழந்தைகளுக்கு வெளிப்படுத்தினீர்; இதினிமித்தம் நான் உம்மைத் துதிக்கிறேன்.

௨௬. பிதாவே, இதுவே உமது பார்வைக்கு நலம்.

௨௭. பிதாவினால் என்னிடத்தில் எல்லாம் ஒப்பிக்கப்பட்டன; பிதாவேயன்றி ஒரு மனுஷனுங் குமாரனை அறியான்; குமாரனும், எவனுக்குக் குமாரன் அவனை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, அவனுமேயன்றி ஒருமனுஷனும் பிதாவை அறியான்.

௨௮. வருந்திப் பாரஞ்சுமக்கிற நீங்களெல்லாரும் என்னிடத்தில் வாருங்கள், நான் உங்களுக்கு இளைப்பாறுதலைத் தருவேன்.

௨௯. நான் சாந்தமும், தாழ்ந்த சிந்தையுமுள்ளவர்; ஆதலால் என் நுகத்தை உங்கள் மேல் ஏற்றுக்கொண்டு, என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்; அதினால் உங்கள் ஆத்துமங்களுக்கு இளைப்பாறுதலைப் பெறுவீர்கள்.

௩௰. என் நுகம் எளிது; என் சுமை இலகுவென்றார்.

# ௰௨. அதிகாரம்.

௧. கிறிஸ்து ஓய்வுநாளைப்பற்றி உபதேசித்தல்: ௯. சூம்பின கையைச் சொஸ்தப்படுத்தல்: ௰௪. பரிசேயர் கிறிஸ்துவுக்கு விரோதமாய்த் துராலோசனை செய்தல்: அவரைக்குறித்துச் சொல்லப்பட்ட தீர்க்கதரிசனங்கள் சித்திபெறல்: ௨௨. பிசாசுபிடித்த குருடும் ஊமையுமாகிய ஒருவனைச் சொஸ்தப்படுத்தல்: ௩௧. தேவாவிக்கு விரோதமாய்ச் சொல்லிய தூஷணத்தைக் குறித்து உபதேசித்தல்: ௩௮. யோனாவையும், தென்றேசத்து இராசாத்தியையுஞ் சுட்டி அடையாளந் தேடினவர்களைக் கண்டித்தல்: ௪௩. அசுத்த ஆவி பிடித்தவனுடைய காரியம் விவரித்தல்: ௪௬. தன் மாதா முதலிய இனத்தார் இன்னாரெனக் குறித்தல்.

௧. அக்காலத்திலே யேசு ஓய்வுநாளிலே பயிர்வ
ழியே நடந்துபோகையில், அவருடைய சீஷர் பசி
யாயிருந்தபடியினாலே கதிர்களைக் கொய்து, புசிக்கத்
துடங்கினார்கள்.

௨. அதைக் கண்ட பரிசேயர் அவரிடத்தில், பா
ரும், ஓய்வுநாளில் செய்யத்தகாததை உம்முடைய
சீஷர் செய்கிறார்களென்று சொல்ல—

௩. அவர்களுக்கு அவர், தாவீதும், அவனோடி
ருந்த சனங்களும் பசியாயிருந்தபொழுது,

௪. அவன் தேவாலயத்தில் பிரவேசித்து, ஆசாரி
யருக்கேயன்றி, தனக்கும், தன்னோடிருந்தவர்களுக்
கும் புசிக்கத்தகாத தேவசமுகத்தப்பங்களைப் புசித்
தானென்று நீங்கள் வாசிக்கவில்லையா?

௫. மேலும் ஆசாரியர், ஓய்வுநாட்களில் தேவால
யத்தில் ஓய்வுநாளின் நியமத்தை மீறியுங் குற்ற
மில்லாதிருக்கிறார்களென்று நீங்கள் வேதத்திலே வா
சிக்கவில்லையா?

௬. தேவாலயத்திலும் பெரியவர் ஒருவர் இந்த
ஸ்தானத்திலே இருக்கிறாரென்று நான் உங்களுக்
குச் சொல்லுகிறேன்.

௭. "பலியையல்ல, இரக்கத்தை விரும்புகிறேன்'' என்பதின் அருத்தம் நீங்கள் அறிந்தீர்களேயாகில், குற்றமற்றவர்கள் மேல் குற்றஞ் சுமத்தமாட்டீர்கள்.
௮. மனுபுத்திரன் ஒய்வுநாளுக்குக் கர்த்தராயிருக்கிறாரென்றார்.
௯. பின்பு அவர் அவ்விடம்விட்டு, அவர்களுடைய ஆலயத்திற் பிரவேசித்தார்.
௰. அங்கே சூம்பினகையையுடைய மனுஷன் ஒருவன் இருந்தான்; அப்பொழுது அவர்கள் அவர் மேல் குற்றஞ் சுமத்தும்படி அவரை நோக்கி, ஓய்வு நாளில் சொஸ்தப்படுத்துவது நியாயமா? என்று கேட்க—
௰௧. அவர் அவர்களுக்கு உத்தரமாய், உங்களில் எவனாகிலுந் தன் ஆடு ஓய்வுநாளில் ஒரு குழியிலே விழுந்தால், அதைப் பிடித்துத் தூக்கிவிடானா?
௰௨. ஆட்டிலும் மனுஷன் எவ்வளவு மேன்மையுள்ளவன்; ஆதலால் ஓய்வுநாட்களில் நன்மைசெய்வது நியாயமென்று சொல்லி,
௰௩. பின்பு அந்த மனுஷனை நோக்கி, உன் கையை நீட்டென்று சொல்ல—அவன் அதை நீட்டினான்; அது மற்றக் கையைப்போலச் சொஸ்தமாயிற்று.
௰௪. அப்பொழுது பரிசேயர் புறப்பட்டு, அவரை எப்படிக் கொலைசெய்யலாமென்று, அவருக்கு விரோதமாகத் துராலோசனை செய்தார்கள்.
௰௫. யேசு அதை அறிந்து, அவ்விடம் விட்டுப் போனார்; அநேக சனங்கள் அவருக்குப் பின் செல்ல—
௰௬. அவர் அவர்களெல்லாரையுஞ் சொஸ்தப்படுத்தி, தம்மை ஒருவரும் பிரசித்தம்பண்ணாதபடி அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

௰௭. "நான் தெரிந்துகொண்ட என் தாசனும், என் ஆத்துமாவுக்குப் பிரியனுமாயிருக்கிற என் அன்பானவரைப் பாருங்கள்; அவர் மேல் என் ஆவியை அமரப்பண்ணுவேன்; அதினால் அவர் புறத்தேசத்தாரிடத்தில் நீதியைப் பிரசித்தப்படுத்துவார்.

௰௮. கலகமாவது, உரத்த சத்தமாவது செய்யார்; வீதிகளில் தன் குரல் கேட்கப்பண்ணார்.

௰௯. நீதி செயம் அடையப்பண்ணும்வரைக்கும், அவர் நெரிந்த நாணலை முறிக்க மாட்டார்; மங்கி எரிகிற திரியை அவிக்க மாட்டார்.

௨௰. அந்நிய தேசத்தவர்கள் அவருடைய நாமத்தில் நம்பிக்கை வைப்பார்கள்" என்று,

௨௧. ஏசாயா தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டது இவ்விதமாய் நிறைவேறிற்று.

௨௨. பின்பு பிசாசு பிடித்திருந்த குருடனும், ஊமையனுமான ஒருவன் அவரிடத்திற் கொண்டுவரப்பட்டபொழுது, அவர், குருடனும் ஊமையனுமானவனைப் பேசவும், காணவுந்தக்கதாய்ச் சொஸ்தப்படுத்தினார்.

௨௩. சனங்களெல்லாரும் பிரமித்து, இவர் தாவீதின் புத்திரனல்லவா? என்றார்கள்.

௨௪. பரிசேயரோ அதைக் கேட்டு, இவன் பிசாசுகளைத் துரத்துவது பாகால் சேபூலென்னும் பிசாசாதிபதியினாலேயன்றி, மற்றப்படியல்லவென்றார்கள்.

௨௫. யேசு அவர்களுடைய சிந்தனைகளை அறிந்து, அவர்களை நோக்கி, தனக்குள்ளே விரோதமாய்ப் பிரிந்திருக்கிற எந்த இராச்சியமும் அழிந்துபோம்; ஒரு நகரத்தாராகிலும், ஒரு குடும்பத்தாராகிலுந் தங்களுக்குள்ளே பிரிவுபட்டால், நிலைநிற்கமாட்டார்கள்.

௨௬. அப்படியே சாத்தான் சாத்தானைத் துரத்தி ஞல், தனக்குத்தானே விரோதமாயிருக்கிருன்; ஆ கையால் அவன் இராச்சியம் எவ்விதமாய் நிற்கும்?

௨௭. நான் பாகால் சேபூலினுலே பிசாசுகளைத் துரத்துகிறேனுகில், உங்கள் பிள்ளைகள் அவைகளை ஆராலே துரத்துகிருர்கள்? ஆகையால் அவர்களே உங்களுக்கு நியாயந்தீர்ப்பவர்களாவார்கள்.

௨௮. நான் தேவனுடைய ஆவியினுலே பிசாசுக ளைத் துரத்துகிறேனுகில், தேவனுடைய இராச்சிய மே உங்களிடத்தில் வந்துவிட்டது.

௨௯. முன்பு பலவானைக் கட்டாவிட்டால், அவ னுடைய வீட்டில் ஒருவன் பிரவேசித்து, அவனு டைய உடைமைகளைக் கொள்ளையிடுவதெப்படி? கட்டினுல் அவனுடைய வீட்டைக் கொள்ளையாட லாம்.

௩௰. என்னேடே இராதவன் எனக்கு விரோதி யானவன்; என்னேடே சேர்க்காதவன் சிதற அடிக் கிருன்.

௩௧. ஆதலால் மனுஷர் செய்யும் எந்தப் பாவமும், தூஷணமும் மனுஷருக்கு மன்னிக்கப்படும்; பரி சுத்த ஆவிக்கு விரோதமான பாவமோ மன்னிக்கப் படுவதில்லையென்று நான் உங்களுக்குச் சொல்லு கிறேன்.

௩௨. எவனுகிலும் மனுபுத்திரனுக்கு விரோதமா கப் பேசினுல், அது அவனுக்கு மன்னிக்கப்படும்; எவனுகிலும் பரிசுத்த ஆவிக்கு விரோதமாகப் பேசி ஞல், அது இம்மையிலும் மறுமையிலும் அவனுக்கு மன்னிக்கப்படுவதில்லை.

௩௩. ஒரு மரத்தை அதின் கனிகளினுல் அறிய லாம்; நீங்கள் ஒரு மரத்தை நல்லமரமென்றெண்ணி ஞல், அதின் கனியையும் நல்லதென்றெண்ணுங்

கள். ஒரு மரத்தைக் கேடுள்ளதென்றெண்ணினால், அதின் கனியையுங் கேடுள்ளதென்றெண்ணுங் கள்.

௩௪. விரியன்குட்டிகளே, நீங்கள் தீயவர்களாயிருக்க, நல்லவைகளைப் பேசுவதெப்படி? மனதில் நிறைந்ததையே வாய் பேசும்.

௩௫. நல்ல மனுஷன் தன் இருதயத்திலுள்ள நல்ல பொக்கிஷத்திலிருந்து நல்லவைகளை எடுத்துக் காண்பிக்கிறான்; தீமையுள்ள மனுஷன் தன் தீமையுள்ள பொக்கிஷத்தில் இருந்து தீயவைகளை எடுத்துக் காண்பிக்கிறான்.

௩௬. மனுஷர் தாங்கள் பேசும் வீணான வாக்குகளொவ்வொன்றையுங் குறித்து நியாயத்தீர்ப்பு நாளில் உத்தரவாதம்பண்ணுவார்களென்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௭. நீ உன் வாக்குகளினாலே நீதிமானென்றும், உன் வாக்குகளினாலே குற்றவாளியென்றுந் தீர்க்கப்படுவாயென்றார்.

௩௮. அப்பொழுது வேதபாரகரிலும், பரிசேயரிலுஞ் சிலர் அவரை நோக்கி, போதகரே, உம்மால் ஏதாயினும் ஒரு அடையாளத்தைக் காண விரும்புகிறோமென்று சொல்ல—

௩௯. அவர் அவர்களுக்கு உத்தரமாய், தீமையும், சோரமார்க்கமுமான இந்தச் சந்ததியார் ஒரு அடையாளத்தைக் கேட்கிறார்கள்; யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி, வேறொரு அடையாளமும் இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை.

௪௰. யோனா மூன்று நாள் இரவும் பகலும் ஒரு மகா மச்சத்தின் வயிற்றிலிருந்ததுபோல, மனுபுத்திரனும் மூன்றுநாள் இரவும் பகலும் பூமிக்குள்ளிருப்பான்.

௪௧. நினிவே நகரத்தார் நியாயத்தீர்ப்புநாளில் இந்தச் சந்ததியாருக்கு விரோதமாயெழும்பி, இவர்கள்மேல் குற்றஞ் சுமத்துவார்கள்; யோனா செய்த பிரசித்தத்தைக் கேட்டு, அவர்கள் மனந்திரும்பினார்கள்; யோனாவிலும் பெரியவர் ஒருவர் இவ்விடத்தில் இருக்கிறார்.

௪உ. அன்றியும், தெற்குத் தேசத்து இராசாத்தி நியாயத்தீர்ப்புநாளில் இந்தச் சந்ததியாருக்கு விரோதமாயெழும்பி, இவர்கள்மேல் குற்றஞ் சுமத்துவாள்; அவள் சலோமோனின் ஞானத்தைக் கேட்கும்பொருட்டுப் பூமியின் எல்லைகளினின்றும் வந்தாள்; சலோமோனிலும் பெரியவர் ஒருவர் இவ்விடத்தில் இருக்கிறார்.

௪௩. அசுத்த ஆவி ஒரு மனுஷனை விட்டுப் புறப்பட்டபின்பு, நீரற்ற இடங்களில் அலைந்து, இளைப்பாறுதற்கான இடத்தைத் தேடியுங் கண்டடையாமலிருக்கும்பொழுது,

௪௪. அது, நான் புறப்பட்ட என் வீட்டிற்குத் திரும்பிப்போவேனென்று சொல்லி, அவ்விடத்திற் சென்று, வெறுமையும், பெருக்கிச், சோடிக்கப்பட்டதுமாய் இருக்கக் கண்டு, திரும்பிப் போய்,

௪௫. தன்னிலும் மிகவுந் தீமையான வேறேழு ஆவிகளைக் கூட்டிக்கொண்டு வந்து, பிரவேசித்து, அங்கே வாசம்பண்ணும்; அந்த மனுஷனுடைய முன்னிலைமையிலும் பின்னிலைமை அதிக கேடுள்ளதாகும்; அப்படியே இந்தத் தீமையுள்ள சந்ததிக்கும் நடக்குமென்றார்.

௪௬. சனங்களுடனே அவர் இப்படிப் பேசுகையில், அவருடைய மாதாவும், சகோதரரும் அவரோடே பேச விரும்பி, வெளியே நின்றார்கள்.

௪௭. ஒருவன் அவரிடத்தில், பாரும், உம்முடைய மாதாவும், சகோதரரும் உம்மோடே பேச விரும்பி, வெளியே நிற்கிறார்களென்றான்.

௪௮. அவர் தமக்கு அதைத் தெரிவித்தவனுக்கு உத்தரமாய், என்னுடைய மாதா யாவர்? என் சகோதரர் யாவரென்று சொல்லி,

௪௯. தம்முடைய சீஷருக்கு நேரே தமது கையை நீட்டி, என் மாதாவையும், சகோதரரையும் பாருங்கள்.

௫௰. பரமண்டலத்திலுள்ள என் பிதாவின் சித்தத்தின்படி செய்கிறவன் எவனோ, அவனே என் சகோதரன், என் சகோதரி, என் மாதாவென்றார்.

---

## ௰௩. அதிகாரம்.

௧. விதைக்கிறவனை உவமித்தல்: ௰. சீஷருடனே சம்பாஷித்தல்: ௰௮. சொல்லிய உவமையின் அருத்தந் தெரிவித்தல்: ௨௪. களையின் உவமை: ௩௧. கடுகு விதையின் உவமை: ௩௩. புளித்தமாவின் உவமை: ௩௪. தீர்க்கதரிசனங்கள் சித்தியாதல்: ௩௬. முன் சொன்ன உவமையின் வியாக்கியானஞ் சொல்லல்: ௪௪. மறைபொருளின் உவமை: ௪௫. முத்தின் உவமை: ௪௭. வலையின் உவமை: ௫௧. சீஷருக்குணர்த்தல்: ௫௩. கிறிஸ்து சுயதேசத்தாரால் அவமதிக்கப்படல்.

௧. பின்பு, அந்நாளிலே யேசு வீட்டிலிருந்து புறப்பட்டுப்போய், கடலினருகே உட்கார்ந்தார்.

௨. அநேக சனங்கள் அவரிடத்தில் கூடிவந்தபடியால் அவர் படவில் ஏறி உட்கார்ந்து, சனங்களெல்லாருங் கரையிலே நிற்க—

௩. அவர் உவமைகளால் அநேக விசேஷங்களை அவர்களுக்குப் போதித்தார்.

௪. பாருங்கள், விதைக்கிறவன் ஒருவன் விதைக்கப் புறப்பட்டான்; அவன் விதைக்கிறபொழுது,

சில வழியருகே விழுந்தன; அவைகளைப் பறவைகள் வந்து பட்சித்தன.

௫. சில சிறிது மண்ணுள்ள கற்பாறை இடங்களில் விழுந்து, மண் ஆழமில்லாததினால், உடனே முளைத்தன.

௬. வெயில் ஏறினபொழுது, அவைகள் தீந்து, வேரில்லாததினால் உலர்ந்துபோயின.

௭. சில முள்ளுகளுக்குள்ளே விழுந்தன; முள்ளுகள் வளர்ந்து அவைகளை நெருக்கின.

௮. வேறு சிலவோ நல்லநிலத்தில் விழுந்து, சில நூறாகவும், சில அறுபதாகவும், சில முப்பதாகவும் பலன்கொடுத்தன.

௯. கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவனென்றார்.

௰. பின்பு சீஷர் வந்து, அவரை நோக்கி, ஏன் உவமைகளால் அவர்களுடன் பேசுகிறீரென்று கேட்க—

௰௧. அவர்களுக்குத்தரமாய் அவர், பரம இராச்சியத்தின் மறைபொருளை அறியும்படிக்கு உங்களுக்கு அருள் கிடைத்தது; அவர்களுக்கோ கிடைக்கவில்லை.

௰௨. உள்ளவனெவனோ, அவனுக்குக் கொடுக்கப்படும், பரிபூரணமும் அடைவான்; உள்ளவனல்லாதவனோ, அவனிடத்திலுள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும்.

௰௩. அவர்கள் கண்டுங் காணாமலும், கேட்டுங் கேளாமலும், உணராமலுமிருக்கிறபடியினாலே, நான் உவமைகளால் அவர்களுடனே பேசுகிறேன்.

௰௪. "இந்தச் சனங்கள் கண்களினாலே காணாமலும்; காதுகளினாலே கேளாமலும், இருதயத்தில் உணராமலும், மனந்திரும்பாமலும், என்னால் சொஸ்தமடையாமலுமிருக்கும்படிக்கு, அவர்கள் கடின

மாக்கப்பட்ட இருதயத்தையும், மந்தமாக்கப்பட்ட காதுகளையும், மூடிக்கொண்டிருக்கிற கண்களையும் உடையவர்களாயிருக்கிறபடியினாலே,

௰௫. நீங்கள் கேட்பீர்கள், ஆனாலும் உணரமாட்டீர்கள்; காண்பீர்கள், ஆனாலும் அறியமாட்டீர்கள்" என்று ஏசாயா சொல்லிய தீர்க்கதரிசன வாக்கியம் அவர்களிடத்தில் நிறைவேறிற்று.

௰௬. உங்கள் கண்களோ காணுகின்றன; உங்கள் காதுகளோ கேட்கின்றன; ஆதலால் அவைகளே ஆனந்தமுள்ளவைகள்.

௰௭. நீங்கள் காண்கிறவைகளைக் காணவும், கேட்கிறவைகளைக் கேட்கவும், அநேக தீர்க்கதரிசிகளும், நீதிமான்களும் விரும்பியும், காணாமலுங் கேளாமலும் போனார்களென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௰௮. ஆகையால் நீங்கள் விதைக்கிறவனைப் பற்றும் உவமையைக் கேளுங்கள்.

௰௯. ஒருவன் இராச்சியத்தின் வாக்கைக் கேட்டும், உணராதிருந்தால், தீயன் வந்து, அவனுடைய இருதயத்திலே விதைக்கப்பட்டதைக் கவருகிறான்; இவனே வழியருகே விழுந்த விதையைப் பெற்றவன்.

௨௰. கற்பாறையில் விழுந்த விதையைப் பெற்றவன், வாக்கைக் கேட்டவுடனே சந்தோஷத்தோடே அதை உட்கொண்டும், வேர்பற்றியிராமற் கொஞ்சக்காலம் மாத்திரம் நிலைத்து,

௨௧. பின்பு அந்த வாக்கினிமித்தம் உபத்திரவமும், துயரமும் நேரிட்ட மாத்திரத்தில் தவறுகிறான்.

௨௨. முள்ளுள்ள இடத்தில் விழுந்த விதையைப் பெற்றவன், வாக்கைக் கேட்டபின்பு, லௌகீகக்

கவலையும், பொருள் மயக்கமும் அந்த வாக்கை நெருக்குவதினாற் பலனற்றவனாவான்.

௨௩. நல்ல நிலத்திலே விழுந்த விதையைப் பெற்றவனோ, அந்த வாக்கைக் கேட்டும், உணர்ந்தும், அதின்படி செய்தும், ஒருவன் நூறும், ஒருவன் அறுபதும், ஒருவன் முப்பதுமாகப் பலன்கொடுத்து வருகிறானென்றார்.

௨௪. அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொல்லிக்காட்டினார்; பரம இராச்சியம், ஒருவன் தன் வயலில் நல்ல விதை விதைத்தலுக்கொப்பாயிருக்கின்றது.

௨௫. சனங்கள் நித்திரைகொள்ளுகையில், அவன் சத்துரு வந்து, கோதுமைக்குள்ளே களையை விதைத்துப்போனான்.

௨௬. பின்பு பயிர் முளைத்து, கதிர்கொண்டபொழுது, அந்தக் களைகளுங் காணப்பட்டன.

௨௭. பணிவிடைக்காரர் தங்கள் எசமானனிடத்தில் வந்து, ஆண்டவனே, நீர் உமது வயலில் நல்ல விதையை விதைத்தீரல்லவா? களைகள் அதில் எப்படியுண்டாயினவென்று கேட்க—

௨௮. அவன், சத்துரு அதைச் செய்தானென்றான். அப்பொழுது பணிவிடைக்காரர், நாங்கள் போய், அவைகளைப் பிடுங்குவது உமக்குச் சித்தமாவென்று கேட்க—

௨௯. அவன், வேண்டாம்; களைகளைப் பிடுங்குகிறபொழுது கோதுமையையும் பிடுங்காதபடிக்கு,

௩௰. அவ்விரண்டையும் அறுப்புக்காலம் வரைக்கும் வளரவிடுங்கள்; அறுப்புக்காலத்தில் நான் அரிஅரிகிறவர்களுடனே, நீங்கள் முதல் களைகளைப் பிடுங்கி, எரிக்கிறதற்குக் கட்டுக்களாகக் கட்டிவையுங்கள்; பின்பு கோதுமையை என் களஞ்சியத்தில்

சேர்த்துவிடுங்களென்று சொல்வேன் என்பதைச் சொன்னேனென்றார்.

௩௧. அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொல்லிக் காட்டினார்; பரம இராச்சியம் ஒரு கடுகுவிதைக்கு ஒப்பாயிருக்கின்றது; அதை ஒரு மனுஷன் எடுத்துத் தன் நிலத்திலே விதைத்தான்.

௩௨. அது எல்லா விதைகளிலுஞ் சிறியதாயினும், வளரும்பொழுது எந்தப் பூண்டிலும் பெரிதாகி, ஆகாயத்துப் பறவைகள் அதின் கிளைகளில் வந்தடையத் தக்கதான செடியாகுமென்றார்.

௩௩. அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொன்னார்; மூன்று மரக்கால் மா முழுவதும் புளிப்பாகும்வரைக்கும், ஒரு ஸ்திரீ புளித்த மாவை எடுத்து அதிலே மறைத்துவைத்தாள்; பரம இராச்சியம் அந்தப் புளித்தமாவுக்கொப்பாயிருக்கின்றதென்றார்.

௩௪. யேசு இவைகளையெல்லாம் உவமையாகச் சனங்களுடன் பேசினார்; உவமைகளினாலேயன்றி வேறுவிதமாய் அவர் அவர்களுடன் பேசவில்லை.

௩௫. "நான் உவமைகளோடே என் வாயைத் திறந்து, உலகத்தோற்றம் முதல் மறைந்த பொருளை வெளிப்படுத்துவேன்" என்று தீர்க்கதரிசி சொல்லிய வாக்கு நிறைவேறிற்று.

௩௬. பின்பு யேசு சனங்களை அனுப்பிவிட்டு, வீட்டுக்குப் போனார்; அங்கே அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து, நீர் வயலின் களைகளைக்குறித்துச் சொல்லிய உவமைப் பொருளை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டுமென்று சொல்ல—

௩௭. அவர்களுக்குத்தரமாய், அவர், நல்ல விதையை விதைக்கிறவன் மனுபுத்திரன்; வயல் உலகம்.

௩௮. நல்ல விதை இராச்சியத்தின் சந்ததியார்; களைகளோ தீயனுடைய சந்ததியார்.

௩௯. அவைகளை விதைக்கிற சத்துரு பிசாசு; அறுப்புக்காலம் உலகத்தின் முடிவு; அரி அரிகிற வர்கள் தேவதூதர்கள்.

௪௰. களைகள் சேர்க்கப்பட்டு அக்கினியினால் எரிக்கப்படுகிறதுபோல, இவ்வுலகத்தின் முடிவிலே நடக்கும்.

௪௧. மனுபுத்திரன் தமது தூதரை அனுப்ப—அவர் கள், அவருடைய இராச்சியத்திலுள்ள சகல இட றல்களையும், பாவஞ்செய்பவர்களையுஞ் சேர்த்து,

௪௨. அக்கினிச் சூளையில் அவர்களைப் போடு வார்கள்; அங்கே அழுகையும், பற்கடிப்புமுண்டா யிருக்கும்.

௪௩. அப்பொழுது நீதிமான்கள் தங்கள் பிதா வின் இராச்சியத்திலே சூரியனைப்போலப் பிரகாசிப் பார்கள்; கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக் கடவன்.

௪௪. அன்றியும், பரம இராச்சியம் வயலில் புதைக் கப்பட்ட பொக்கிஷத்துக்கு ஒப்பாயிருக்கின்றது; அதை ஒரு மனுஷன் கண்டு மறைத்து, பின்பு அதைப்பற்றிய சந்தோஷத்தினால் போய், தனக் குள்ள யாவையும் விற்று, அந்த வயலைக் கொள் ளுகிறான்.

௪௫. அன்றியும் பரம இராச்சியம் நல்ல முத்துக் களைத் தேடி,

௪௬. ஒரு ஆணிமுத்தைக் கண்டு, போய், தனக் குள்ள யாவையும் விற்று, அதைக் கொள்ளுகிற வியா பாரிக்கு ஒப்பாயிருக்கின்றது.

சஎ மேலும் பரம இராச்சியம் கடலிலிடப்பட்டு, எந்தச் சாதியானவைகளையும் வாரிக்கொள்ளுகிற வலைக்கு ஒப்பாயிருக்கின்றது.

சஅ. அது நிறைந்தபொழுது சனங்கள் அதைக் கரையில் இழுத்து, உட்கார்ந்து, நல்லவைகளைப் பாத்திரங்களிலே சேர்த்து, தகாதவைகளைத் தள்ளி விடுகிறார்கள்.

சகூ. இவ்விதமாக உலகத்தின் முடிவிலே நடக்கும்; தேவதூதர் புறப்பட்டு, நீதிமான்களிலிருந்து துன்மார்க்கரைப் பிரித்து,

ருய. அக்கினிச்சூளையில் அவர்களைப் போடுவார்கள்; அங்கே அழுகையும் பற்கடிப்புமுண்டாயிருக்குமென்றார்.

ருக. யேசு, இவைகளையெல்லாம் நீங்கள் அறிந்துகொண்டீர்களாவென்று அவர்களிடத்திற் கேட்க— அவர்கள் கர்த்தாவே, அறிந்துகொண்டோமென்றார்கள்.

ருஉ. அவர் பின்னும் அவர்களை நோக்கி, பரம இராச்சியத்தைக்குறித்த உபதேசத்தைப் பெற்ற எந்த வேதபாரகனும், புதியவைகளையும், பழையவைகளையுந் தன் பண்டசாலையிலிருந்து வெளிப்படுத்தும் வீட்டெசமானனைப்போலிருக்கிறானென்றார்.

ருங. யேசு இந்த உவமைகளைச் சொல்லி முடித்த பின்பு, அவ்விடம்விட்டுப் புறப்பட்டார்.

ருச. அவர் தமது ஊரில் வந்து, ஆலயத்திலே சனங்களுக்கு உபதேசம்பண்ணினார்; அவர்கள் பிரமித்து, இவ்வித ஞானமும் ஆச்சரியமான கிரியைகளும் இவனுக்கு எங்கேயிருந்துவந்தன.

ருரு. இவன் தச்சனுடைய புத்திரனல்லவா? இவன் மாதாவின் நாமம் மரியாளல்லவா? இவனு

டைய சகோதரர் யாக்கோபும், யோசேப்பும், சீமோ
னும், யூதாவுமல்லவா?
௫௬. இவனுடைய சகோதரிகளெல்லாரும் நமக்
குள்ளே இருக்கிறார்களல்லவா? இவைகளெல்லாம்
இவனுக்கு எங்கேயிருந்துவந்தனவென்று சொல்லி,
௫௭. அவனைக் குறித்து இடறுண்டார்கள்; யேசு
அவர்களை நோக்கி, தன் தேசத்திலும், தன் குடும்பத்
திலுமன்றி, தீர்க்கதரிசி எவ்விடத்திலாகிலும் அவ
மதிக்கப்படானென்றார்.
௫௮. அவர்களுடைய அவிசுவாசத்தினிமித்தம்
அவர் அவ்விடத்தில் அநேக ஆச்சரியமான கிரியை
களைச் செய்யவில்லை.

# ௰௪. அதிகாரம்.

க. யோவான்ஸ்நானன் கொலைசெய்யப்படல்: ௰௩. ஐந்தப்பத்தையும் இரண்டு மீனையுங் கொண்டு ஐயாயிரஞ் சனங்களைப் போஷித்தல்: ௨௨. யேசு சமுத்திரத்தின்மேல் உலாவல்: ௩௪. அநேக சனங்களைச் சொஸ்தப்படுத்தல்.

க. அக்காலத்தில் காற்பங்கு தேசாதிபதியாகிய
ஏரோது யேசுவின் கீர்த்தியைக் கேள்விப்பட்டு,
௨. தன் பணிவிடைக்காரரை நோக்கி, இவன்
யோவான்ஸ்நானன்; இவன் மரித்தோரினின்றும்
உயிர்த்தெழுந்தவனாதலால், இவனால் இந்த ஆச்சரிய
மான கிரியைகள் நடப்பிக்கப்பட்டனவென்றான்.
௩. முன்பு யோவான், ஏரோது இராசாவிடத்தில்
அவனுடைய தம்பியாகிய பிலிப்பினுடைய மனைவி
ஏரோதியாளைக் குறித்து, நீர் அவளைச் சேர்க்கத்தகா
தென்று சொன்னதினிமித்தம்,
௪. ஏரோது இராசா அவனைப் பிடித்துக் கட்டி,
காவலில் வைப்பித்தான்.

௫. அவனைக் கொலைசெய்ய அபிப்பிராயங்கொண்டும், சனங்கள் யோவானைத் தீர்க்கதரிசியென்று எண்ணினபடியினால் அவன் அவர்களுக்குப் பயந்தான்.

௬. ஆனாலும் ஏரோதின் சென்மதினங் கொண்டாடப்பட்டபொழுது, ஏரோதியாளின் புத்திரி அவர்களுக்கு முன் நடனம்பண்ணி, ஏரோதைச் சந்தோஷப்படுத்தினாள்.

௭. ஆனபடியால் எதைக் கேட்டாலுந் தருவேனென்று அவன் அவளுக்கு ஆணையிட்டு வாக்குக் கொடுத்தான்.

௮. அவள் தன் மாதாவினால் முன் உணர்த்தப்பட்டபடி, நீர் யோவான்ஸ்நானனுடைய சிரசை ஒரு தாலத்தில் இங்கே எனக்குத் தரவேண்டுமென்றாள்.

௯. அதினால் இராசா துக்கமடைந்து, தான் இட்ட ஆணையினிமித்தமும், தன்னுடன் பந்தியிலிருந்தவர்களினிமித்தமும், அவன் அதைக் கொடுக்கிறதற்குக் கட்டளையிட்டான்.

௰. பின்பு சிறைச்சாலையில் ஆளனுப்பி, யோவானுடைய சிரசைச் சேதிப்பித்தான்.

௰௧. அந்தச் சிரசு ஒரு தாலத்தில் கொண்டுவந்து, அந்தக் கன்னிக்குக் கொடுக்கப்பட்டது; அவள் அதைத் தன் மாதாவிடத்தில் கொண்டுபோய்க் கொடுத்தாள்.

௰௨. பின்பு அவனுடைய சீஷர் வந்து, அவனுடைய உடலை எடுத்து அடக்கம்பண்ணி, போய், யேசுவுக்கு அந்தச் செய்தியைத் தெரிவித்தார்கள்.

௰௩. யேசு அதைக் கேட்டு, படவிலேறி, வனத்தைச் சேர்ந்த ஒரு இடத்துக்குத் தனியே போனார்; சனங்கள் அதைக் கேள்விப்பட்டு, பட்டணங்களிலிருந்து கால்நடையாய் அவரைப் பின்சென்றார்கள்.

௰௪. யேசு புறப்பட்டுத் திரளான சனங்களைக் கண்டு, அவர்கள் மேல் மனதுருகி, அவர்களில் வியாதியுள்ளவர்களைச் சொஸ்தப்படுத்தினார்.

௰௫. சாயங்காலத்தில் அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து, இது வனத்தைச் சேர்ந்த இடம்; நேரஞ்சென்றுபோயிற்று; சனங்கள் கிராமங்களுக்குப்போய்த் தங்களுக்காக ஆகாரத்தைக் கொள்ளும்படிக்கு அவர்களை அனுப்பிவிடுமென்று சொல்ல—

௰௬. யேசு, இவர்கள் போகவேண்டுவதில்லை; நீங்களே இவர்களுக்குப் புசிக்கக்கொடுங்களென்றார்.

௰௭. அதற்கு அவர்கள் ஐந்து அப்பமும், இரண்டு மீனுமேயல்லாமல், வேறொன்றும் எங்களிடத்தில் இல்லையென்று சொல்ல—

௰௮. அவர், அவைகளை என்னிடத்திற் கொண்டு வாருங்களென்றார்.

௰௯. பின்பு அவர், சனங்கள் புல்லின்மேலே பந்தியிருக்கும்படி கட்டளையிட்டு, அந்த ஐந்து அப்பங்களையும், இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்தை அண்ணாந்துபார்த்து, ஆசீர்வாதஞ்செய்து, அப்பங்களைப் பிட்டுச் சீஷரிடத்திற் கொடுக்க—சீஷர் சனங்களுக்குக் கொடுத்தார்கள்.

௨௰. அவர்களெல்லாரும் புசித்துத் திருத்தியடைந்தார்கள்; சேஷமானவைகளைப் பன்னிரண்டு கூடை நிறைய எடுத்தார்கள்.

௨௧. புசித்தவர்கள், ஸ்திரிகளும், பிள்ளைகளுந் தவிர, ஏறக்குறைய ஐயாயிரம் புருஷர்.

௨௨. அப்பால் யேசு சனங்களை அனுப்பிவிடுகையில், தம்முடைய சீஷர் படவிலேறித் தமக்கு முன் அக்கரைக்குப் போகும்படி அவர்களை நெருக்கி ஏவினார்.

௨௩. சனங்களை அனுப்பிவிட்டபின்பு, அவர் தனியே பிரார்த்தனைபண்ணும்படி ஒரு மலைக்குப் போனார்; சாயங்காலமானபொழுது, அவர் அங்கே தனித்துநின்றார்.

௨௪. அந்தச் சமயத்திலே படவு கடலின் நடுவே சேர்ந்து, எதிர்காற்றாயிருந்ததினிமித்தம் அலைகளால் அலைவுபட்டது.

௨௫. அப்பொழுது இரவின் நாலாஞ் சாமத்திலே யேசு சமுத்திரத்தின்மேல் நடந்து, அவர்களிடத்திற் சென்றார்.

௨௬. அவர் சமுத்திரத்தின்மேல் நடக்கிறதைச் சீஷர் கண்டு, திகைத்து, ஆவேசமென்று சொல்லி, பயத்தினால் ஓலமிடத்தொடங்கினார்கள்.

௨௭. அப்பொழுது யேசு, அவர்களுடனே, திடங்கொள்ளுங்கள், பயப்படாதிருங்கள்; நான்தானென்றார்.

௨௮. பேதுரு அவரை நோக்கி, கர்த்தாவே, நீரேயானால் சலத்தின்மேல் உம்மிடத்தில் நான் வரும்படி கட்டளையிடுமென்றான்.

௨௯. அதற்கு அவர் வா என்று சொல்ல—பேதுரு படவை விட்டிறங்கி, யேசுவினிடத்தில் போகும்படி சலத்தின் மேல் நடந்து,

௩௰. காற்றுப் பலத்திருப்பதைக் கண்டு பயந்து அமிழத்தொடங்கி, கர்த்தாவே, என்னை இரட்சியுமென்று உரத்த சத்தமிட்டான்.

௩௧. உடனே யேசு கையை நீட்டி, அவனைப் பிடித்துக்கொண்டு, அவனுடனே, ஆ! அற்பவிசுவாசியே, ஏன் சந்தேகப்பட்டாய்? என்றார்.

௩௨. அவர்கள் படவிலேறினவுடனே, காற்று அமைதியாயிற்று.

௩௩. அப்பொழுது படவிலுள்ளவர்கள் வந்து, அவரை நமஸ்கரித்து, மெய்யாகவே நீர் தேவனுடைய குமாரனென்றார்கள்.

௩௪. பின்பு அவர்கள் அக்கரைக்கு ஓடி, கெனேசரேத்து நாட்டிலே சேர்ந்தார்கள்.

௩௫. அவ்விடத்து மனுஷர் அவரை அறிந்து, அந்தத் தேசமெங்கும் ஆளனுப்பி, பிணியாளிகளெல்லாரையும் அழைப்பித்து, அவரிடத்தில் கொண்டு வந்தார்கள்.

௩௬. அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தை மாத்திரந் தொடும்படி வேண்டினார்கள்; தொட்ட யாவருஞ் சொஸ்தமடைந்தார்கள்.



# ௰௫. அதிகாரம்.

௧. கிறிஸ்து, வேதப்ரகரையும் பரிசேயரையுங் கண்டித்தல்: ௰. மனுஷரை அசுத்தப்படுத்துகிறதின்னதென்று குறித்தல்: ௨௧. ஒரு கானான் ஸ்திரியின் புத்திரியைச் சொஸ்தப்படுத்தல்: ௨௯. அநேக சனங்களைச் சொஸ்தப்படுத்தல்: ௩௨. ஏழு அப்பங்களினாலும், சில சிறுமீன்களினாலும் நாலாயிரஞ் சனங்களைப் போஷித்தல்.

௧. அக்காலத்திலே யெருஷலேமிலுள்ள வேதபாரகரும், பரிசேயரும், யேசுவினிடத்தில் வந்து,

௨. உம்முடைய சீஷர் தங்கள் கைகளைக் கழுவாமல் போசனம்பண்ணி, முதியோருடைய பாரம்பரிய முறைமையை மீறி நடக்கிறதென்ன? என்று கேட்க—

௩. அவர்களுக்குத்தரமாக யேசு, நீங்கள் உங்கள் பாரம்பரிய முறைமையினால் தேவனுடைய கட்டளையை ஏன் மீறிநடக்கிறீர்கள்?

௪. "உன் பிதாவையும், மாதாவையுங் கனம்பண்ணவேண்டும்" என்றும், "பிதாவையாயினும், மாதா

வையாயினும் நிந்திப்பவன் கொலைசெய்யப்பட வேண்டும்'' என்றுந் தேவன் கட்டளையிட்டார்.

ரு. நீங்களோ, ஒருவன் தன் பிதாவிடத்திலாயினும், மாதாவிடத்திலாயினும் உமக்கென்னாலே உதவுகிறதேதுண்டோ, அதைக் காணிக்கையாகக் கொடுக்கிறேனென்னும் வாக்கைச்சொன்னால்,

சூ. அவன் தன் பிதாவையும், தன் மாதாவையுங் கனம்பண்ணவேண்டுவதில்லையென்று போதித்து, இவ்விதமாய் உங்கள் பாரம்பரிய முறைமைகளினாலே தேவனுடைய கட்டளையை அபத்தமாக்குகிறீர்கள்.

எ. ஆ! கபடிகளே, "இந்தச் சனங்கள் தங்கள் வாயினால் என்னிடத்திற் சேருகிறார்கள்; தங்கள் உதடுகளினால் என்னைக் கனம்பண்ணுகிறார்கள்; இவர்களுடைய இருதயமோ எனக்குத் தூரமாயிருக்கின்றது.

அ. மனுஷர் கற்பித்த விதிகளைத் தேவகட்டளையென்று போதித்து, விருதாவாக எனக்கு ஆறுதல் செய்துவருகிறார்கள்'' என்று,

கூ. ஏசாயா உங்களைக் குறித்துத் தீர்க்கதரிசன வாக்கியங்களை நன்றாகச் சொன்னானென்றார்.

௰. பின்பு சனங்களை வர அழைத்து, நீங்கள் கேட்டு உணர்ந்துகொள்ளுங்கள்.

௰௧. வாய்க்குள்ளே போகிறது ஒருவனையும் அசுசிப்படுத்தாது; வாயிலிருந்து புறப்படுகிறதே ஒருவனை அசுசிப்படுத்துகின்றதென்று அவர்களுடனே சொன்னார்.

௰௨. அப்பொழுது அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து, பரிசேயர் இந்த வாக்கைக் கேட்டு, இடறுண்டார்களென்று அறிந்திருக்கிறீரா? என்று சொல்ல—

௰௩. அவர் என் பரமபிதா நடாத நாற்றுகள் யாவும் பிடுங்கப்படும்.

௰௪. அவர்களை விட்டுவிடுங்கள்; அவர்கள் குருடருக்கு வழிகாட்டுகிற குருடராயிருக்கிறார்கள்; குருடன் குருடனுக்கு வழிகாட்டினால், இருவரும் குழியிலே விழுவார்களென்றார்.

௰௫. அப்பொழுது பேதுரு அவரை நோக்கி, இந்த உவமையை எங்களுக்கு விவரிக்கவேண்டுமென்றான்.

௰௬. அதற்கு யேசு, இதுவரைக்கும் நீங்களும் புத்தியில்லாதவர்களா?

௰௭. வாய்க்குள்ளே போகிறவையெல்லாம் வயிற்றிற் பிரவேசித்துக், கழிந்துபோகின்றனவென்பதை, நீங்கள் இன்னும் உணர்ந்துகொள்ளவில்லையா?

௰௮. வாயிலிருந்து புறப்படுகிறவைகள் இருதயத்திலிருந்து புறப்பட்டு வருகின்றன; இவைகளே மனுஷனை அசுசிப்படுத்துகின்றன.

௰௯. இருதயத்திலிருந்து துராலோசனைகள், கொலைகள், விபசாரங்கள், வேசைமார்க்கங்கள், களவுகள், பொய்ச்சாட்சிகள், தூஷணங்களாகிய இவைகள் புறப்படுகின்றன.

௨௰. மனுஷனை அசுசிப்படுத்துகிறவைகள் இவைகளே; கைகழுவாமல் புசிப்பதோ, மனுஷனை அசுசிப்படுத்துவதில்லையென்றார்.

௨௧. பின்பு யேசு, அவ்விடம்விட்டு விலகி, தீறு சீதோனின் திசைகளுக்குப் போனார்.

௨௨. கானான் தேசத்தாளாகிய ஒரு ஸ்திரீ அந்த எல்லைகளிலிருந்து வந்து, அவரை நோக்கி, கர்த்தாவே, தாவீதின் புத்திரனே, என்மேல் இரங்கும்; என் மகள் பிசாசினால் மிகவும் வருத்தப்படுகிறாளென்று சொல்லி, ஓலமிட்டாள்.

௨௩. அவர் அவளுக்குத்தரமாக ஒரு வாக்குஞ் சொல்லவில்லை; அப்பொழுது அவருடைய சீஷர் சேர்ந்து, இவள் நமக்குப் பின்வந்து, ஓலமிடுகிறாளே; இவளை அனுப்பிவிடுமென்று அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௨௪. அதற்கு அவர் காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேற் கோத்திரத்தாரிடத்திற்கேயன்றி, நான் அனுப்பப்படவில்லையென்றார்.

௨௫. பின்பு அவள் வந்து, அவரை வணங்கி, கர்த்தாவே, எனக்கு உதவிசெய்யுமென்று சொல்ல—

௨௬. அவர் உத்தரமாய், பிள்ளைகளுடைய அப்பத்தை எடுத்து, நாய்களுக்குப் போடுகிறது தகுதியல்லவென்றார்.

௨௭. அதற்கு அவள் கர்த்தாவே, அது மெய்; ஆயினும் நாய்கள் தங்கள் எசமானரின் போசன பீடங்களிலிருந்து விழுந் துணிக்கைகளைத் தின்னுமே என்றாள்.

௨௮. அப்பொழுது யேசு அவளுக்குத்தரமாய், ஸ்திரியே, உன் விசுவாசம் பெரிது; நீ விரும்பினபடியே உனக்காகக்கடவதென்றார்; அந்நேரமே அவளுடைய மகள் சொஸ்தமடைந்தாள்.

௨௯. பின்பு யேசு அவ்விடம்விட்டு, கலிலேயாக்கடலினருகே வந்து, ஒரு மலையிலேறி அங்கே உட்காந்தார்.

௩௰. அப்பொழுது சப்பாணிகள், குருடர், ஊமையர், முடவர் முதலான அநேகம்பேரைக் கூட்டிவந்து, மிகுந்த சனங்கள் யேசுவைச் சேர்ந்து, அவர்களை அவருடைய பாதத்தில் விட்டார்கள்; அவர்களை அவர் சொஸ்தப்படுத்தினார்.

௩௧. ஊமையர் பேசுகிறதையும், முடவர் சொஸ்தமாகிறதையும், சப்பாணிகள் நடக்கிறதையும், குரு

டர் காண்கிறதையும், சனங்கள் கண்டு ஆச்சரியப்
பட்டு, இஸ்ரவேலின் தேவனைத் துதித்தார்கள்.
௩௨. பின்பு யேசு தம்முடைய சீஷரை அழைத்
து, இந்தச் சனங்களைக் குறித்து நான் பரிதாபப்படு
கிறேன்; இவர்கள் இப்பொழுது மூன்று நாளாக
என்னிடத்திலே தங்கி, போசனமில்லாமலிருக்கி
றார்கள்; இவர்கள் வழியிலே சோர்ந்துபோவார்க
ளே; இவர்களைப் பட்டினியாக அனுப்பிவிடே
னென்றார்.

௩௩. அதற்கு அவருடைய சீஷர், இவ்வளவு
சனங்களுக்குந் திருத்தியுண்டாகும்படிக்கு வேண்
டிய அப்பங்கள் இந்த வனத்தில் நமக்கு எப்படி
அகப்படுமென்றார்கள்.
௩௪. யேசு அவர்களுடனே, உங்களிடத்தில் எத்
தனை அப்பங்களுண்டென்று கேட்க—ஏழு அப்
பங்களும், சில சிறுமீன்களுமுண்டென்று சீஷர்
சொன்னார்கள்.

௩௫. அப்பொழுது அவர் சனங்களைத் தரையிலே
பந்தியிருக்கச்சொல்லி,

௩௬. அந்த ஏழு அப்பங்களையும், மீன்களையும்
எடுத்து, ஸ்தோத்திரஞ்செய்து, அவைகளைப் பிட்டு,
தம்முடைய சீஷரிடத்திற் கொடுக்க—சீஷர் சனங்
களுக்குக் கொடுத்தார்கள்.

௩௭. எல்லாரும் புசித்துத் திருத்தியடைந்தபின்பு,
சேஷமானவைகளை ஏழு கூடைநிறைய எடுத்தார்
கள்.

௩௮. போசனம்பண்ணினவர்கள், ஸ்திரீகளும்
பிள்ளைகளுந் தவிர, நாலாயிரம் புருஷர்.
௩௯. அவர் சனங்களை அனுப்பிவிட்டு, படவி
லேறி, மக்தலா கரையைச் சேர்ந்தார்.

## ௰௬. அதிகாரம்.

க. பரிசேயர் அடையாளமாக அற்புதங்களைக் கேட்டல்: ௬. கிறிஸ்து உபதேசமாகிய புளித்தமாவைக் குறித்துத் தம்முடைய சீஷரை எச்சரித்தல்: ௰௩. கிறிஸ்துவைக்குறித்துச் சனங்கள் கொண்ட எண்ணத்தையும், பேதுருவின் அறிக்கையையுந் தெரிவித்தல்: ௨௧. கிறிஸ்து தமது மரணத்தை முன்னுரைத்தல்: பேதுருவைக் கண்டித்தல்: ௨௪. தமக்குப் பின்சென்ற சனங்களுக்கு உபதேசித்தல்.

க. அப்பொழுது பரிசேயரும், சதுசேயரும் வந்து அவரைச் சோதிக்கும்பொருட்டு, வானத்தில் எதாயினும் ஒரு அடையாளத்தைத் தங்களுக்குக் காண்பிக்கும்படி அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௨. அவர்களுக்குத்தரமாய் அவர், சாயங்காலத்தில் செவ்வானந் தோன்றினபடியால், வெளுக்குமென்கிறீர்கள்.

௩. விடியற்காலத்தில் வானஞ் செந்நிறமும் மந்தாரமுமாயிருப்பதினால், இன்று பெருங்காற்றும், மழையுமுண்டாகுமென்கிறீர்கள்; கபடிகளே, வானத்தின் தோற்றத்தை நீங்கள் வகையறுக்கக்கூடுமேயாகில், காலங்களின் அடையாளங்களை வகையறுக்கமாட்டீர்களா?

௪. தீமையும், சோரமார்க்கமுமுள்ள சந்ததியாரானவர்கள் அடையாளங் கேட்கிறார்கள்; யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி, வேறொரு அடையாளமும் இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லையென்று சொல்லி, அவர்களை விட்டுப்போனார்.

௫. அவருடைய சீஷர் அக்கரைக்கு வருமுன், அப்பங்களை எடுத்துவர, மறந்துவிட்டார்கள்.

௬. பின்பு யேசு அவர்களை நோக்கி, பரிசேயருஞ் சதுசேயருமானவர்களுடைய புளித்தமாவுக்கு விலகி மிகவும் எச்சரிக்கையாயிருங்களென்றார்.

௭. நாம் அப்பங்களைக் கொண்டுவராததினாலல்லவோ? என்றுசொல்லி, தங்களுக்குள்ளே அவர்கள் யோசித்துக்கொண்டிருப்பதை,

௮. யேசு கண்டு, அவர்களை நோக்கி, அற்பவிசுவாசிகளே, நீங்கள் அப்பங்களைக் கொண்டுவராததைக் குறித்து, உங்களுக்குள்ளே யோசிக்கிறதென்ன?

௯. இதுவரைக்கும் உங்களுக்குப் புத்தியில்லையா? ஐயாயிரம் பேரைப் போஷித்த ஐந்து அப்பங்களையும், துண்டங்களினால் நீங்கள் நிறைத்த கூடை இத்தனையென்பதையும்,

௰. நாலாயிரம்பேரைப் போஷித்த ஏழு அப்பங்களையும், துண்டங்களினால் நீங்கள் நிறைத்த கூடை இத்தனையென்பதையும், நினைத்திருக்கவில்லையா?

௰௧. பரிசேயரும் சதுசேயருமானவர்களுடைய புளித்தமாவுக்கு விலகி எச்சரிக்கையாயிருங்களென்னும், இவ்வாக்கை நான் அப்பத்தைக் குறித்துச் சொல்லவில்லையென்று நீங்கள் சிந்தித்துக்கொள்ளாதிருக்கிறதெப்படி? என்றார்.

௰௨. அப்பொழுது அவர்கள் அப்பத்தின் புளித்தமாவுக்கல்ல, பரிசேயருஞ் சதுசேயருமானவர்களுடைய உபதேசத்துக்கே சாவதானமாயிருக்கச் சொன்னாரென்றறிந்தார்கள்.

௰௩. பின்பு யேசு, பிலிப்பு சேசாரியாவின் திசைகளில் வந்தபொழுது, தம்முடைய சீஷரை நோக்கி, மனுபுத்திரனாகிய என்னை ஆரென்று சனங்கள் சொல்லுகிறார்களென்று கேட்க—

௰௪. அவர்கள் உம்மைச் சிலர் யோவான்ஸ்நானனென்றும், சிலர் இலீசாவென்றும், சிலர் எரேமியாவென்றும், தீர்க்கதரிசிகளில் ஒருவரென்றுஞ் சொல்லுகிறார்களென்றார்கள்.

௰௫. பின்பு அவர் அவர்களை நோக்கி, நீங்கள் என்னை ஆர்? என்று சொல்லுகிறீர்களென்று கேட்டார்.

௰௬. அதற்குச் சீமோன் பேதுரு, நீர் சீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்துவென்றான்.

௰௭. அவனுக்குத்தரமாய் யேசு, யோனாவின் புத்திரனாகிய சீமோனே, நீ வாழ்வுடையவன்; மாமிச ரத்தமல்ல, பரமண்டலத்திலுள்ள என் பிதா இதை உனக்கு வெளிப்படுத்தினார்.

௰௮. நீயே பேதுரு; இந்தக் கன்மலையின்மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்களும் அதை மேற்கொள்ளமாட்டாதென்று நான் உனக்குச் சொல்லுகிறேன்.

௰௯. அன்றியும், பரம இராச்சியத்தின் திறவுகோல்களை உனக்குத் தருவேன்; பூமண்டலத்திலே நீ கட்டுவதெதுவோ, அது பரமண்டலத்திலேயுங் கட்டப்படும்; பூமண்டலத்திலே நீ கட்டவிழ்ப்பதெதுவோ, அது பரமண்டலத்திலேயுங் கட்டவிழ்க்கப்படுமென்று சொல்லி,

௨௰. பின்பு தாம் கிறிஸ்துவாகிய யேசுவென்று ஒருவருக்குஞ் சொல்லாதபடிக்குத் தம்முடைய சீஷருக்குக் கட்டளையிட்டார்.

௨௧. யேசு, தாம் யெருஷலேமுக்குப் போய், முதியோர்களாலும், பிரதான ஆசாரியர்களாலும், வேதபாரகர்களாலும், மிகுந்த வேதனை அனுபவிக்கவும், கொலைசெய்யப்படவும், மூன்றாம் நாளில் எழுந்திருக்கவும் வேண்டுமென்று, அதுமுதல் தம்முடைய சீஷருக்குத் தெரிவிக்கத்தொடங்கினார்.

௨௨. அப்பொழுது பேதுரு அவரைத் தனியே அழைத்து, அவரைக் கடிந்து, கர்த்தாவே, அது உமக்

குத் தூரமாயிருப்பதாக; அது ஒருபொழுதும் உமக்கு நேரிடாதென்று சொல்ல—

உங. அவர் திரும்பிப் பேதுருவை நோக்கி, சாத்தானே, நீ எனக்குப் பின்னே போ; எனக்கு இடறலாயிருக்கிறாய்; நீ தேவனுக்கேற்றவைகளையல்ல, மனுஷருக்கேற்றவைகளைச் சிந்திக்கிறாயென்றார்.

உச. பின்பு யேசு தம்முடைய சீஷரை நோக்கி, என்னைப் பின்பற்றி நடக்க ஒருவன் விரும்பினால், தன்னை வெறுத்து, தன் சிலுவையை எடுத்துக்கொண்டு, என்னைப் பின்பற்றக்கடவன்.

உரு. தன் பிராணனை இரட்சிக்க விரும்புகிறவன் அதை இழந்துபோவான்; என்னிமித்தந் தன் பிராணனை இழந்துபோகிறவன் அதைக் கண்டடைவான்.

உசு. மனுஷன், உலகமுழுவதையுஞ் சம்பாதித்துக்கொண்டாலும், தன் பிராணனை இழந்துபோனால், அவனுக்கு என்ன லாபம்? ஒரு மனுஷன், தன் பிராணனை மீட்டுக்கொள்ளுகிறதற்கு எதைக் கொடுப்பான்?

உஎ. மனுபுத்திரன் தன்னுடைய தூதரோடே தனது பிதாவின் மகிமையிலே வருவான்; அப்பொழுது அவனவன் கிரியைக்கேற்க அவனவனுக்குப் பலனளிப்பான்.

உஅ. இங்கே நிற்கிறவர்களிற் சிலர், மனுபுத்திரன் தன்னுடைய இராச்சியத்தில் வருவதைக் காண்கிறதற்கு முன்னே மரணமடையாரென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

# ௰எ. அதிகாரம்.

க. கிறிஸ்து மறுரூபப்படல்: ௰௪. சந்திரரோகியைச் சொஸ்தப்படுத்தல்: ௨௨. அவர் தமது மரணத்தை முன்னுரைத்தல்: ௨௪. தீர்வையைக் கொடுப்பதற்கு அற்புதத்தைச் செய்தல்.

க. ஆறுநாளுக்குப் பின்பு, யேசு, பேதுருவை யும், யாக்கோபையும், அவன் சகோதரனுகிய யோ வானையும் அழைத்துக்கொண்டு, தனித்திருக்கும்படி உயர்ந்த மலையின்மேல் சென்று,

௨. அவர்களுக்கு முன்பாக மறுரூபமானார். அவ ருடைய முகஞ் சூரியனைப்போலப் பிரகாசித்தது: அவருடைய வஸ்திரம் ஒளியைப்போல வெண்மை யுள்ளதாயிற்று.

௩. உடனே மோசேயும், இலீசாவும் அவரோடே சம்பாஷணை பண்ணுகிறவர்களாய், அவர்களுக்குத் தரிசனமானார்கள்.

௪. அப்பொழுது பேதுரு யேசுவை நோக்கி, கர்த் தாவே, நாம் இங்கே தரிப்பது நலம்; உமக்குச் சித் தமானல், இவ்விடத்தில் உமக்கொன்று, மோசேக் கொன்று, இலீசாவுக்கொன்றாக, மூன்று குடிசைக ளைக் கட்டுவோமென்றான்.

௫. அவன் பேசுகையில் ஒளியுள்ள ஒரு மேகம் அவர்கள்மேல் நிழலிட்டது; இவர் என் அன்பான குமாரன்; இவரிற் பிரியமாயிருக்கிறேன்; இவருக் குச் செவிகொடுங்களென்னும் வாக்கு அந்த மேகத் திலிருந்து பிறந்தது.

௬. சீஷர் அதைக் கேட்டு, முகங்குப்புற விழுந் து, மிகவும் பயந்தார்கள்.

௭. அப்பொழுது யேசு வந்து அவர்களைத் தொட்டு, எழும்புங்கள்; பயப்படாதிருங்களென்ருர்.

௮. அவர்கள் கண் ஏறிட்டுப் பார்த்தபொழுது, யேசுவையேயன்றி, வேருெருவரையுங் காணவில்லை.

௯. பின்பு அவர்கள் மலையினின்று இறங்குகிறபொழுது, யேசு அவர்களை நோக்கி, மனுபுத்திரன் மரித்தோரிலிருந்து எழுந்திருக்கும் வரைக்கும், நீங்கள் இந்தத் தரிசனத்தை ஒருவருக்குஞ் சொல்லவேண்டாமென்று கட்டளையிட்டார்.

௰. அப்பொழுது அவருடைய சீஷர் அவரை நோக்கி, முன்னமே இலீசா வரவேண்டுமென்று வேதபாரகர் சொல்லுகிறதென்னவென்று கேட்க—

௰௧. அதற்குத்தரமாக யேசு, முன்பு இலீசா வந்து எல்லாவற்றையுஞ் சீர்ப்படுத்தவேண்டுமென்பது மெய்.

௰௨. இலீசா வந்தாயிற்றென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; அவர்கள் அவனென்றறியாமல் அவனுக்குத் தங்கள் இஷ்டப்படி செய்தார்கள். அப்படியே மனுபுத்திரனும் அவர்களால் உபத்திரவப்படுவானென்ருர்.

௰௩. அப்பொழுது அவர் யோவான்ஸ்நானனைக் குறித்துத் தங்களுடனே பேசினுரென்று சீஷர் அறிந்தார்கள்.

௰௪. பின்பு அவர்கள் சனக்கூட்டத்தினிடத்தில் சேர்ந்தபொழுது, ஒரு மனுஷன் அவரிடத்தில் வந்து, முழங்காற்படியிட்டு,

௰௫. கர்த்தாவே, என் மகன் மேல் இரங்கும்; அவன் சந்திரரோகியாய்க் கொடிய வேதனைப்படுகி

றான்; அடிக்கடி அக்கினியிலும், அடிக்கடி சலத்தி லும் விழுகிறான்.

௰௬. அவனை உம்முடைய சீஷரிடத்திற் கொண்டுவந்தேன்; அவர்கள் அவனைச் சொஸ்தப்படுத்தக் கூடாமற் போயிற்றென்றான்.

௰௭. அதற்குத்தரமாய் யேசு, ஆ! விசுவாசமில்லாத மாறுபாடுள்ள சந்ததியாரே, எதுவரைக்கும் உங்களோடிருப்பேன்? எதுவரைக்கும் உங்களைச் சகிப்பேன்? அவனை என்னிடத்திற் கொண்டுவாருங்களென்றார்.

௰௮. யேசு அந்தப் பிசாசைக் கடிந்தார்; உடனே அது அவனை விட்டுப் போயிற்று. அந்நேரமே அந்தப் பிள்ளை சொஸ்தமடைந்தான்.

௰௯. பின்பு சீஷர் தனித்து, யேசுவினிடத்தில் வந்து, ஏன், நாங்கள் அதை அகற்றக்கூடாமற் போயிற்றென்றார்கள்.

௨௰. யேசு அவர்களை நோக்கி, உங்களுடைய அவிசுவாசத்தினாலேதான். ஒரு கடுகுவிதையளவு விசுவாசம் உங்களுக்குண்டானால், நீங்கள் இந்த மலையை நோக்கி, இவ்விடம்விட்டு அப்புறம் போவென்று சொல்ல—அது போம்: உங்களால் கூடாத காரியம் ஒன்றும் இராதென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௧. ஆனாலும் பிரார்த்தனையினாலும், உபவாசத்தினாலுமேயன்றி, இந்த இனம் அகலாதென்றார்.

௨௨. அவர்கள் கலிலேயா நாட்டிலே சஞ்சரித்த சமயத்தில், யேசு அவர்களை நோக்கி, மனுபுத்திரன் மனுஷருடைய கையில் ஒப்பிக்கப்படுவான்.

௨௩. அவர்கள் அவனைக் கொலைசெய்வார்கள்; அவன் மூன்றும் நாளில் எழுந்திருப்பானென்றார்; அதினால் அவர்கள் மிகுந்த துக்கமடைந்தார்கள்.

௨௪. அவர்கள் கப்பர்நாகூமில் வந்தபொழுது, வரிப்பணஞ் சேர்க்கிறவர்கள் பேதுருவினிடத்தில் வந்து, உங்கள் போதகர் வரிப்பணங் கொடுக்கிற தில்லையாவென்று கேட்க — அவன், கொடுக்கிறாரென்றான்.

௨௫. அவன் வீட்டிலே வந்தபொழுது, அவன் பேசுகிறதற்கு முன்னே யேசு அவனை நோக்கி, சீமோனே, பூமியிலுள்ள இராசாக்கள் ஆர் கையிலிருந்து தீர்வையும், வரியும் வாங்குகிறார்கள்? தங்கள் சந்ததியார் கையிலிருந்தா? அந்நியர் கையிலிருந்தா? இது உனக்கு எப்படித் தோன்றுகின்றதென்று கேட்க—

௨௬. அந்நியர் கையிலிருந்தென்று பேதுரு அவருக்குச் சொன்னான்: யேசு, அப்படியானால் சந்ததியார் நீங்கலாயிருப்பார்கள்.

௨௭. ஆனாலும் நாம் அவர்களுக்கு இடறல் வருவியாதபடிக்கு, நீ கடலுக்குப் போய், தூண்டிலைப் போட்டு, முதல் அகப்படுகிற மீனை எடு; அதின் வாயைத் திறந்துபார்; அதில் ஒரு வெள்ளிக்காசைக் காண்பாய்; அதை, எடுத்துவந்து, எனக்காகவும், உனக்காகவும் அவர்களுக்குக் கொடுவென்றார்.

# ௰௮. அதிகாரம்.

க. கிறிஸ்து தம்முடைய சீஷர் தாழ்ந்த சிந்தையுள்ளவர்களும், இடறல் வருவியாதவர்களுமாயிருக்கவேண்டுமென்று போதித்தல்: ௰௫. குற்றஞ்செய்த சகோதரனை நடத்தும் முறைமையைக் காட்டல்: ௨க. இத்தனைதரம் மன்னிக்கவேண்டுமென்று குறித்தல்: ௨௩. மன்னிப்பதைக் குறித்து ஒரு திருஷ்டாந்தத்தைக் காட்டல்.

க. அக்காலத்திலே சீஷர் யேசுவினிடத்தில வந்து, பரம இராச்சியத்தில் யாவன் பெரியவன் என்றார்கள்?

உ. யேசு ஒரு சிறுபிள்ளையைத் தம்மிடத்தில் அழைத்து, அதை அவர்கள் மத்தியில் நிறுத்தி,

௩. நீங்கள் சீர்ப்பட்டுச் சிறுபிள்ளைகளைப்போலாகாவிட்டால், பரம இராச்சியத்தில் பிரவேசிக்கமாட்டீர்களென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪. ஆகையால் இந்தச் சிறுபிள்ளையைப்போலத் தன்னைத் தாழ்த்துகிறவனெவனோ, அவன் பரம இராச்சியத்தில் பெரியவன்.

௫. இப்படிப்பட்ட ஒரு பிள்ளையை என் நாமத்தினால் ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னையும் ஏற்றுக்கொள்ளுகிறான்.

௬. என்மேல் விசுவாசமாயிருக்கிற இந்தச் சிறியரில் ஒருவனுக்கு இடறல் வருவிக்கிறவனெவனோ, அவனுடைய கழுத்தில் ஏந்திரக்கல்லைக் கட்டி, அவனை ஆழமான கடலில் அமிழ்த்துவது அவனுக்கு நலம்.

எ. ஐயோ! இடறல்களினிமித்தம் உலகத்துக்கு ஆபத்து வரும்; இடறல்கள் வருவது அவசியம்; ஆனாலும், ஐயோ! இடறல்களை வருவிப்பவனுக்கு ஆபத்துவரும்.

௮. ஆதலால் உன் கையானாலும், காலானாலும் உனக்கு இடறல் வரப்பண்ணினால், அவைகளைத் தறித்தெறிந்துவிடு; இரண்டு கைகளோடாயினும், இரண்டு கால்களோடாயினும் நித்திய அக்கினியில் தள்ளப்படுவதிலும், சப்பாணியாயாயினும், ஊனனாயாயினுஞ் சீவனிற் பிரவேசிப்பது உனக்கு நலம்.

௯. மேலும் உன் கண் உனக்கு இடறல்வரப்பண்ணினால், அதைத் தோண்டி எறிந்துவிடு; இரண்டு கண்ணையுடையவனாய் நரகாக்கினியில் தள்ளப்படுவதிலும், ஒற்றைக் கண்ணையுடையவனாய்ச் சீவனில் பிரவேசிப்பது உனக்கு நலம்.

௰. இந்தச் சிறுவரில் ஒருவனையும் அவமதியாதபடி எச்சரிக்கையாயிருங்கள்: அவர்களுடைய தூதர்கள் பரமண்டலத்தில் என் பரமபிதாவின் முகத்தை நித்தமுந் தரிசித்திருக்கிறார்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௧. அன்றியும், மனுபுத்திரன் கெட்டுப்போனதை இரட்சிக்கவந்தான்.

௰௨. உங்களுக்கு எப்படித் தோன்றுகின்றது? ஒரு மனுஷனுக்குண்டான நூறு ஆடுகளில் ஒன்று தப்பிப்போனால், அவன் தொண்ணூற்றொன்பது ஆடுகளையும் மலைகளில் விட்டு, தப்பிப்போனதைப் போய்த் தேடுவானல்லவா?

௰௩. அவன் அதைக் கண்டால், தப்பிப்போகாமலிருந்த தொண்ணூற்றொன்பதைப்பார்க்கிலும், அதைக்குறித்து அதிகமாய்ச் சந்தோஷப்படுவானென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௪. அந்தப்படி இந்தச் சிறியரில் ஒருவனாயினுங் கெட்டுப்போவது, பரமண்டலத்திலுள்ள உங்கள் பிதாவுக்குச் சித்தமல்ல.

௰௫. உன் சகோதரன் உனக்கு விரோதமாய்க் குற்றஞ்செய்தால், நீ போய், நீயும் அவனுந் தனித்திருக்கையில், அவனைக் கடிந்துகொள்; அவன் உனக்குச் செவிகொடுத்தால், உன் சகோதரனை ஆதாயமாய்ப் பெற்றுக்கொண்டாய்.

௰௬. அவன் உனக்குச் செவிகொடாவிட்டால், காரியமெல்லாம் இரண்டுமூன்று சாட்சிகளுடைய வாக்கினால் நிலைப்படும்படிக்கு, நீ இரண்டொருவரை அழைத்துப்போ.

௰௭. அவன் அவர்களுக்கு அமையாதிருந்தால், நீ அதைச் சபைக்கு அறிவிக்கவேண்டும்; அவன் சபைக்கும் அடங்காதிருந்தால், நீ அவனை அஞ்ஞானியையும், ஆயக்காரனையும்போல் எண்ணுவாயாக.

௰௮. பூமண்டலத்தில் நீங்கள் எவைகளைக் கட்டுவீர்களோ, அவைகள் பரமண்டலத்திலுங் கட்டப்படும். பூமண்டலத்தில் எவைகளைக் கட்டவிழ்ப்பீர்களோ, அவைகள் பரமண்டலத்திலுங் கட்டவிழ்க்கப்படுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௯. அன்றியும், பூமண்டலத்தில் உங்களில் இருவர் ஒருமனப்பட்டு, வேண்டுவதெதுவோ, அது பரமண்டலத்திலுள்ள என் பிதாவினால் அவர்களுக்கு அருளப்படும்.

௨௰. இருவராயினும், மூவராயினும், என் நாமத்தில் எங்கே கூடிவருகிறார்களோ, அங்கே நான் அவர்கள் மத்தியிலிருக்கிறேனென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௨௧. அப்பொழுது பேதுரு அவரிடத்தில் வந்து, கர்த்தாவே, என் சகோதரன் எனக்கு விரோதமாய்க்

குற்றஞ்செய்தால், அவனுக்கு நான் எத்தனைதரம் மன்னிக்கவேண்டும்? ஏழுதரமோ? என்று கேட்க—

௨௨. யேசு அவனை நோக்கி, ஏழுதரம் மாத்திரமல்ல; ஏழு எழுபதுதரமென்று உனக்குச் சொல்லுகிறேன்.

௨௩. ஆனபடியால் பரம இராச்சியம், தன் பணிவிடைக்காரருடனே கணக்குப் பார்க்கச் சித்தங்கொண்ட ஒரு இராசனுக்கொப்பாயிருக்கின்றது.

௨௪. அவன் கணக்குப் பார்க்கத் தொடங்கினபொழுது, பதினாயிரந் தாலந்து கடன்பட்ட ஒருவன் அவனிடத்திற் கொண்டுவரப்பட்டான்.

௨௫. அவன் கடனிறுக்கக்கூடாமற்போனபடியால், அவன் ஆண்டவன் அவனையும், அவனுடைய மனைவியையும், பிள்ளைகளையும், அவனுக்குண்டான யாவையும் விற்று, கடன்தீர்க்கும்படி கட்டளையிட்டான்.

௨௬. அப்பொழுது அந்தப் பணிவிடைக்காரன் விழுந்து வணங்கி, ஆண்டவனே, எல்லாவற்றையும் உமக்குத் தந்து தீர்க்கிறேன்; நீர் என்மேல் இரங்கிப் பொறுக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.

௨௭. அப்படியே ஆண்டவன் அந்தப் பணிவிடைக்காரன்மேல் இரங்கி, அவனை விடுவித்து, கடனையும் அவனுக்கு மன்னித்தான்.

௨௮. பின்பு அந்தப் பணிவிடைக்காரன் புறப்பட்டுப்போகையில், தன்னோடே பணிவிடைசெய்து தன்னிடத்தில் நூறு தேனாரியக்காசு கடன்பட்ட ஒருவனைக் கண்டு, அவனைப் பிடித்து, தொண்டையை நெரித்து, நீ பட்ட கடனை எனக்குத் தந்து தீர்க்கவேண்டுமென்றான்.

௨௯. அப்பொழுது அந்தப் பணிவிடைக்காரன் அவன் பாதத்தில் விழுந்து, எல்லாவற்றையும் உனக்குத் தந்து தீர்க்கிறேன்; என்மேல் இரங்கிப் பொறுக்கவேண்டுமென்றான்.

௩௰. ஆனாலும் அவன் சம்மதியாமல்போய், அவன் பட்ட கடனைத் தீர்க்குமளவும் அவனைக் காவலிற் போடுவித்தான்.

௩௧. நடந்தவைகளை மற்றப் பணிவிடைக்காரர் கண்டு, மிகவுந் துக்கித்து, தங்கள் ஆண்டவனிடத்திற்போய், நடந்த யாவையும் இவனுக்குத் தெரிவித்தார்கள்.

௩௨. அப்பொழுது அவன் ஆண்டவன் அவனை அழைப்பித்து, அவனிடத்தில், தீயனான பணிவிடைக்காரனே, நீ என்னை வேண்டிக்கொண்டபடியால், நான் அந்தக் கடன் முழுமையும் உனக்கு மன்னித்தேனே.

௩௩. நான் உன்மேல் இரங்கினபடி, நீயும் உன் உடன்பணிவிடைக்காரன்மேல் இரங்கவேண்டுமல்லவா? என்று சொல்லி,

௩௪. அவன் ஆண்டவன் குரோதங்கொண்டு, அவன் பட்ட கடன்கள் யாவையும் தனக்குக் கொடுத்துத் தீர்க்குமளவும், அவனைச் சிறைச்சாலைக் காவலாளரிடத்தில் ஒப்பித்தான்.

௩௫. நீங்கள் அவனவன் சகோதரன் செய்த தப்பிதங்களை மனப்பூருவமாய் மன்னியாதிருந்தால், இப்படியே என் பரமபிதாவும் உங்களுக்குச் செய்வாரென்றார்.



# ௰௯. அதிகாரம்.

௧. வியாதியுள்ளவர்களைச் சொஸ்தப்படுத்தல்: ௩. விவாகத்தைக் குறித்து நிருணித்தல்: ௰௩. குழந்தைகளை அங்கிகரித்தல்: ௰௬. வாலிபன் ஒருனுக்குப் போதித்தல்: ௨௩. செல்வர் இரட்சிக்கப்படுவது அரிதெனக்காட்டல்: ௨௭. தம்மைப் பின்பற்றுகிறவர்களுக்குப் பலனளிக்க வாக்குத்தத்தஞ்செய்தல்.

௧. இவ்வாக்குகளைச் சொல்லி முடித்தபின்பு, யேசு கலிலேயாநாட்டைவிட்டு, யோர்தானருகேயுள்ள யூதேயா நாட்டின் எல்லைகளுக்குச் சென்றார்.

௨. அநேக சனங்கள் அவரைப் பின்சென்றார்கள்: அவ்விடத்தில் அவர்களை அவர் சொஸ்தப்படுத்தினார்.

௩. அப்பொழுது பரிசேயரிற் சிலர் அவரிடத்திலே வந்து, அவரைச் சோதிக்கும்படி, புருஷன் ஒருவன் தன் மனைவியை எந்த நிமித்தத்தினாலாயினும் தள்ளிவிடலாமாவென்று கேட்க—

௪. அவர் அதற்குத்தரமாய், ஆதியிலே சிருஷ்டிகர்த்தர் மனுஷரைச் சிருஷ்டித்தபொழுது, அவர்களை ஆணும்பெண்ணுமாகச் சிருஷ்டித்தாரென்பதையும்,

௫. "இதினிமித்தம் ஒருவன் தன் பிதாமாதாவைப் பிரிந்து, தன் மனைவியைப் பற்றிக்கொள்வான்; அவர்கள் இருவரும் ஏகாங்கமாயிருப்பார்கள்" என்று அவர் சொன்னாரென்பதையும், நீங்கள் வாசிக்கவில்லையா?

௬. ஆதலால் அவர்கள் இருவராயிராமல், ஏகாங்கமாயிருக்கிறார்கள்: தேவன் இணைத்ததை மனுஷன் பிரிக்கப்படாதென்றார்.

எ. அவர்கள், அப்படியானால் தொடராமுறி கொடுத்து, அவளைத் தள்ளிவிடும்படி மோசே கட்டளையிட்டதேதென்று கேட்க—

அ. அதற்கு அவர், உங்கள் இருதயகடினத்தினிமித்தம் நீங்கள் உங்கள் மனைவிகளைத் தள்ளிவிடும்படி மோசே உங்களுக்கு இடந்தந்தான்; ஆதிமுதலோ அப்படியிருக்கவில்லை.

௯. ஆதலால் எவனாகிலும் விபசாரத்தினிமித்தத்தினாலன்றி, தன் மனைவியைத் தள்ளிவிட்டு, வேறொருத்தியை விவாகம்பண்ணினால், அவன் விபசாரஞ்செய்கிறான்; தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணுகிறவனும் விபசாரஞ்செய்கிறானென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௰. அவருடைய சீஷர் அவரை நோக்கி, ஸ்திரியுடனே புருஷனுடைய சம்பந்தம் இப்படியிருக்குமேயாகில், விவாகம்பண்ணுவது நன்மையல்லவென்றார்கள்.

௰க. அவர், அவர்களுடனே, எவர்களுக்கு அளிக்கப்பட்டதோ அவர்களேயன்றி, மற்றவர்கள் இவ்வாக்கைப் பற்றார்கள்.

௰உ. அண்ணகர்களுண்டு. சிலர் மாதாவின் கருப்பத்தில் அப்படியே பிறந்தார்கள்; சிலர் மற்ற மனுஷரால் அண்ணகர்களாக்கப்பட்டார்கள்; சிலர் பரம இராச்சியத்தினிமித்தம் தங்களை அண்ணகர்களாக்கினார்கள்; இதற்குடன்பட வல்லவனெவனோ அவன் உடன்படக்கடவனென்றார்.

௰௩. பின்பு அவர் குழந்தைகளின்மேல் கைவைத்து, அவைகளுக்காக வேண்டுதல்பண்ணும்படி, அவைகளை அவரிடத்திற் கொண்டுவந்தார்கள்; சீஷர் அவைகளைக் கொண்டுவந்தவர்களைக் கடிந்தார்கள்.

௰௪. யேசு, குழந்தைகளை என்னிடத்தில் வரவிடுங்கள்: தடைபண்ணாதிருங்கள்; பரம இராச்சியம் அப்படிப்பட்டவைகளுடையதென்று சொல்லி,

௰௫. அவைகள்மேல் தம்முடைய கைகளை வைத்து, பின்பு அவ்விடம்விட்டுப் போனார்.

௰௬. அப்பால் ஒருவன் அவரை நோக்கி, நல்ல போதகரே, நித்திய சீவனை நான் பெறும்பொருட்டு எந்த நன்மையைச் செய்யவேண்டுமென்று கேட்க—

௰௭. அவர் அவனுடனே, நீ என்னை நல்லவனென்று சொல்லுகிறதென்ன? தேவன் ஒருவரேயன்றி, நல்லவன் ஒருவனுமில்லை. நீ சீவனிற் பிரவேசிக்க விரும்பினால், கட்டளைகளைக் காத்து நடவென்றார்.

௰௮. அவன் அவருடனே அவைகள் எவையென்று கேட்க—யேசு, "கொலைசெய்யாயாக; விபசாரஞ்செய்யாயாக; களவுசெய்யாயாக; பொய்ச்சாட்சி சொல்லாயாக;

௰௯. உன் பிதாவையும் மாதாவையுங் கனம்பண்ணுவாயாக; உன்னைப்போலப் பிறனையும் நேசிப்பாயாக" என்பவைகளேயென்றார்.

௨௰. அதற்கு அந்த வாலிபன், அவரிடத்தில், இவைகளையெல்லாம் நான் சிறுபிராயமுதல் காத்து நடக்கிறேன்; இனி எனக்கென்ன குறைவு என்றான்.

௨௧. யேசு அவனை நோக்கி, நீ பூரணசற்குணனாயிருக்க விரும்பினால், போய், உனக்குண்டானவைகளை விற்று, தரித்திரருக்குக் கொடு, நீ பரமண்டலத்தில் பொக்கிஷத்தைப் பெறுவாய்; பின்பு வந்து, என்னைப் பின்செல்லென்றார்.

௨௨. வாலிபன் இவ்வாக்கைக் கேட்டு, அவன் மிகுந்த செல்வத்தையுடையவனானதினாலே விசனப்பட்டுப் போய்விட்டான்.

௨௩. அப்பொழுது யேசு தம்முடைய சீஷரை நோக்கி, ஐசுவரியவான் பரம இராச்சியத்தில் பிரவேசிப்பது அரிதென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௪. ஐசுவரியவான் தேவனுடைய இராச்சியத்திற் பிரவேசிப்பதிலும், ஒரு ஒட்டகம் ஊசியின் காதிலே நுழைவது எளிதென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௨௫. அவருடைய சீஷர் அதைக் கேட்டு மிகவும் பிரமித்து, அப்படியானால் ஆர் இரட்சிக்கப்படுவார்களென்று கேட்க—

௨௬. யேசு அவர்களை நோக்கி, அவர்களுடனே, மனுஷரால் இது கூடாதகாரியம்; தேவனோ எந்தக் காரியத்தையுஞ் செய்ய வல்லவரென்றார்.

௨௭. அப்பொழுது பேதுரு அவரை நோக்கி, பாரும், நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உம்மைப் பின்சென்றுவருகிறோமே; எங்களுக்கு என்ன பலன் வருமென்று கேட்க—

௨௮. யேசு அவர்களை நோக்கி, புதுச் சிருஷ்டி தோன்றுங்காலத்தில், மனுபுத்திரன் தமது மகிமையுள்ள சிங்காசனத்தில் வீற்றிருக்கும்பொழுது, என்னைப் பின்சென்று வந்த நீங்களும், இஸ்ரவேலராகிய பன்னிரண்டு வமிசத்தாருக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கும்படி, பன்னிரண்டு சிங்காசனங்களில் வீற்றிருப்பீர்களென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௯. என் நாமத்தினிமித்தம், வீடுகளையாகிலும், சகோதரரையாகிலும், சகோதரிகளையாகிலும், பிதாவையாகிலும், மாதாவையாகிலும், மனைவியையாகிலும், பிள்ளையையாகிலும், நிலங்களையாகிலும் விட்டவனெவனோ, அவன் நூறுமடங்கு பலன்பெற்று, நித்திய சீவனையுஞ் சுதந்தரித்துக்கொள்வான்.

௩௰. முந்தினோர் அநேகர் பிந்தினோராவார்கள்; பிந்தினோர் முந்தினோராவார்கள்.

---

## ௨௰. அதிகாரம்.

௧. திராட்சத்தோட்டக்காரரை உவமித்தல்: ௰௭. கிறிஸ்து தமது மரணத்தை முன்னுரைத்தல்: ௨௰. சீஷர் இருவருக்கு உத்தரஞ்சொல்லித் தாழ்ந்தசிந்தை அவசியமென்று போதித்தல்: ௨௯. குருடர் இருவருக்குப் பார்வையை அருளல்.

௧. பரம இராச்சியம், தன் திராட்சத்தோட்டத்திற்குக் கூலியாட்களை அழைத்துவரும்படி அதிகாலையிலே புறப்பட்ட வீட்டெசமானனுக்கொப்பாயிருக்கின்றது.

௨. அவன் கூலியாட்களிடத்தில், நாளொன்றுக்கு ஒரு தேனாரியப்பணங் கூலிபேசி, அவர்களைத் தன் திராட்சத்தோட்டத்திற்கு அனுப்பினான்.

௩. மூன்றும்மணி நேரத்திலும் அவன் புறப்பட்டு, கடைத்தெருவிலே வேலையில்லாமல் நிற்கிற வேறு சிலரைக் கண்டு,

௪. நீங்களுந் திராட்சத்தோட்டத்திற்குப் போங்கள்; நியாயமானபடி உங்களுக்குத் தருவேனென்று அவர்களுக்குச் சொல்ல—அவர்களும் போனார்கள்.

௫. ஆறும், ஒன்பதாம்மணி நேரங்களிலும் அவன் திரும்பப் புறப்பட்டு, அப்படியே செய்தான்.

௬. பதினோராம்மணி நேரத்திலும் அவன் புறப்பட்டு, வேலையில்லாமல் நிற்கிற வேறு சிலரைக் கண்டு, அவர்களுடனே, பகல் முழுவதும் நீங்கள் இங்கே வீணராய் நிற்கிறதென்னவென்று கேட்க—

௭. அவர்கள் அவனுடனே, ஒருவரும் எங்களை வேலைகொள்ளவில்லையென்றார்கள். அவன் அவர்களுடனே, நீங்களுந் திராட்சத்தோட்டத்திற்குப் போங்கள்; நியாயமானபடி கூலி வாங்கிக்கொள்வீர்களென்றான்.

௮. சாயங்காலத்தில், திராட்சத்தோட்டத்தின் எசமானன் தன் காரியக்காரனை நோக்கி, நீ கூலிக்காரரை அழைத்து, பின்பு வந்தவர்கள் தொடங்கி முன்பு வந்தவர்கள் வரைக்குங் கூலியைக் கொடுவென்றான்.

௯. அப்படிப் பதினோராம்மணி நேரத்தில் வேலை கொள்ளப்பட்டவர்கள் வந்து, ஆளுக்கு ஒவ்வொரு தேனாரியப்பணம் வாங்கிக்கொண்டார்கள்.

௰. முன்பு வேலைக்கு வந்தவர்களுஞ் சேர்ந்து, தங்களுக்கு அதிக கூலி வருமென்றெண்ணினார்கள்: அவர்களும் ஆளுக்கு ஒவ்வொரு தேனாரியப் பணத்தை வாங்கினார்கள்.

௰௧. அதை வாங்குகிறபொழுது அவர்கள் வீட்டெசமானனுக்கு விரோதமாய் மொறுமொறுத்து,

௰௨. பின்னே வந்த இவர்கள் ஒருமணி நேரம் மாத்திரம் வேலைசெய்தார்கள்; பகலின் பாரமும், வெயிலும் பொறுத்த எங்களுக்கு இவர்களைச் சமமாக்கினீரென்றார்கள்.

௰௩. அவர்களில் ஒருவனுக்கு உத்தரமாய் அவன் சிநேகிதா, நான் உனக்கு அநியாயஞ்செய்யவில்லை:

நீ ஒரு தேனாரியப்பணங் கூலி பேசி, என்னுடன் சம்மதிக்கவில்லையா?

௰௪. உன்னுடையதை நீ வாங்கிக்கொண்டுபோ; நான் உனக்குக் கொடுத்ததுபோல, பின்னே வந்த இவனுக்குங் கொடுக்க எனக்கு இஷ்டமாயிருக்கின்றது.

௰௫. என்னுடையதை நான் என் இஷ்டப்படி நடத்தலாகாதா? நான் தயாளனாயிருப்பதினாலோ, நீ வன்கண்ணனாயிருக்கிறாயென்றான்.

௰௬. இவ்விதமாய்ப் பிந்தினோர் முந்தினோராவார்கள்; முந்தினோர் பிந்தினோராவார்கள்; அழைக்கப்பட்டவர்கள் அநேகர்; தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ சிலரென்றார்.

௰௭. யேசு யெருஷலேமுக்குப் பிரயாணமாய்ப் போகிறபொழுது, வழியிலே பன்னிரண்டு சீஷரையுந் தனிப்பட அழைத்து, அவர்களை நோக்கி,

௰௮. கேளுங்கள், நாம் யெருஷலேமுக்குப் போகிறோம்: அங்கே மனுபுத்திரன் பிரதான ஆசாரியரிடத்திலும், வேதபாரகரிடத்திலும் ஒப்பிக்கப்படுவான்: அவர்கள் அவனுக்கு மரணதண்டனைத் தீர்ப்புச் செய்து,

௰௯. அந்நியர் அவனைப் பரிகாசம்பண்ணவும், வாரினால் அடிக்கவும், சிலுவைமரத்தில் அறையவும், அவர்களிடத்தில் ஒப்பிப்பார்கள்: பின்பு மூன்றாம் நாளில் உயிர்த்தெழும்புவானென்றார்.

௨௰. அப்பொழுது செபேதேயுவின் புத்திரருடைய மாதா, தன் புத்திரரோடு அவரிடத்தில் வந்து வணங்கி, அவரிடத்தில் ஒரு விண்ணப்பம்பண்ணியிருந்தாள்.

௨௧. அவர் உனக்கென்னவேண்டுமென்று அவளிடத்திற் கேட்க—அவள் அவரை நோக்கி, உம்முடைய இராச்சியத்தில் என் புத்திரராகிய இருவரில் ஒருவன் உமது வலதுபாரிசத்திலும், மற்றவன் உமது இடதுபாரிசத்திலும் இருக்கும்படி கட்டளையிடுமென்றாள்.

௨௨. அதற்குத்தரமாய் யேசு, நீங்கள் கேட்டது உங்களுக்குத் தெரியவில்லை: நான் குடிக்கும் பாத்திரத்திலே குடிக்க உங்களாலாகுமா? நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தைப் பெற்றுக்கொள்ள உங்களாலாகுமா? என்று கேட்க—அவர்கள் அவருக்கு எங்களாலாகுமென்றார்கள்.

௨௩. அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, என் பாத்திரத்தில் குடிப்பீர்களே. நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தையும் பெற்றுக்கொள்வீர்களே. ஆனாலும் என் பிதாவினால் எவர்களுக்கு ஆயத்தப்படுத்தப்பட்டதோ, அவர்களுக்கேயன்றி மற்றவர்களுக்கு என் வலதுபாரிசத்திலும், என் இடதுபாரிசத்திலும் இருக்கும்படி அருள எனக்கு அதிகாரமில்லையென்றார்.

௨௪. மற்றப் பத்துப்பேரும் அதைக் கேட்டு, அந்தச் சகோதரர் இருவர்மேலுங் கோபங்கொண்டார்கள்.

௨௫. அப்பொழுது யேசு அவர்களை அழைத்து, அந்நியதேசத்தாரிலுள்ள பிரபுகள் அவர்களை ஆளுகிறார்கள்; பெரியோர்கள் அவர்கள்மேல் அதிகாரத்தைச் செலுத்துகிறார்கள்; இது உங்களுக்குத் தெரியும்.

௨௬. உங்களுக்குள் அப்படி இருக்கப்படாது: உங்களில் பெரியவனாக விரும்புகிறவன், உங்கள் பணிவிடைக்காரனாயிருக்கக்கடவன்.

௨௭. உங்களில் பிரதானியாக விரும்புகிறவன், உங்கள் அடிமையாகக்கடவன்.

௨௮. மனுபுத்திரனும் பணிவிடை கொள்வதற் கல்ல, பணிவிடை செய்யவும், அநேகரை மீட்கும் பொருளாகத் தனது பிராணனைத் தரவுமே வந்தா னென்றார்.

௨௯. அவர்கள் யெரிகோவிலிருந்து புறப்பட்டுப் போகையில், அநேக சனங்கள் அவரைப் பின் சென்றார்கள்.

௩௰. அப்பொழுது குருடர் இருவர் வழியருகே உட்காந்திருந்து, யேசு வழியிலே வருகிறாரென்று கேள்விப்பட்டு, கர்த்தாவே, தாவீதின் புத்திரனே, எங்கள்மேல் இரங்குமென்று ஓலமிட்டார்கள்.

௩௧. அவர்கள் பேசாதபடி சனங்கள் அவர்களைக் கடிந்துகொண்டார்கள்: அவர்களோ, கர்த்தாவே, தாவீதின் புத்திரனே, எங்கள்மேல் இரங்குமென்று அதிகமாய் உரத்த சத்தமிட்டார்கள்.

௩௨. அப்பொழுது யேசு தரித்துநின்று, அவர் களை அழைத்து, நான் உங்களுக்கு என்ன செய்ய விரும்புகிறீர்களென்றார்?

௩௩. அவர்கள் அவருடனே, கர்த்தாவே, எங்கள் கண்களைத் திறக்கவேண்டுமென்றார்கள்.

௩௪. யேசு அவர்கள்மேல் மனதுருகி, அவர்களு டைய கண்களைத் தொட்டார். உடனே அவர்கள் பார்வையடைந்து, அவர் பின்னே சென்றார்கள்.

# ௨௧. அதிகாரம்.

௧. கிறிஸ்து கழுதையிலேறி யெருஷலேமுக்கு யாத்திரைசெய்தல்: ௰௨. தேவாலயத்தினின்று வர்த்தகரைத் துரத்திவிடல்: ௰௮. கனிதராத அத்திமரத்தைச் சபித்தல்: ௨௩. பிரதான ஆசாரியரை உத்தரங்கொடாதபடி வெல்லல்: ௨௮. இரண்டு புத்திரரை உவமித்தல்: ௩௩. வீட்டெசமானனையும், வேலைக்காரரையும் உவமித்தல்.

௧. அவர்கள் யெருஷலேமுக்குச் சமீபமாகி, ஒலீவமலையினருகேயுள்ள பேத்பாகேயில் சேர்ந்த பொழுது, யேசு இரண்டு சீஷரை நோக்கி,

௨. உங்களுக்கெதிர்ப்புறத்திலுள்ள அந்தக் கிராமத்திற்குப் போங்கள்; அங்கே கட்டப்பட்டிருக்கிற ஒரு கழுதையையும், அதனுடன் ஒரு குட்டியையுங் காண்பீர்கள். அவைகளின் கட்டை அவிழ்த்து, என்னிடத்திலே கொண்டுவாருங்கள்.

௩. ஒருவன் உங்களுக்கு யாதாயினுஞ் சொன்னால், கர்த்தருக்கு இவைகள் வேண்டுமென்று சொல்லுங்கள். உடனே அவன் அவைகளை அனுப்பிவிடுவானென்று சொல்லி, அவர்களை அனுப்பினார்.

௪. இவைகளெல்லாம் நடந்ததினால், "நீங்கள் சீயோன் குமாரத்தியினிடத்தில், பார், உன் இராசா தாழ்ந்த சிந்தையுள்ளவரும், கழுதையின் குட்டியாகிய கழுதையின்மேலே ஏறியிருப்பவருமாய் உன்னிடத்துக்கு வருகிறாரென்பதைத் தெரிவியுங்கள்" என்று,

௫. தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டது நிறைவேறிற்று.

௬. சீஷர் போய், யேசு தங்களுக்கு இட்ட கட்டளைப்படி செய்து,

எ. கழுதையையும், குட்டியையுங் கொண்டு வந்து, அவைகளின்மேல் தங்கள் வஸ்திரங்களை விரித்து, அவரை ஏற்றினார்கள்.

அ. திரளான சனங்கள் தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள்; சிலர் மரங்களின் கிளைகளைத் தறித்து, வழியிலே பரப்பினார்கள்.

௯. முன் நடப்பாரும், பின் நடப்பாருமாகிய சனங்கள், தாவீதின் புத்திரனுக்கு ஓசன்னா! கர்த்தருடைய நாமத்தினாலே வருபவர் ஸ்தோத்திரிக்கப் பட்டவர்: உன்னதமான வானங்களில் ஓசன்னாவென்று சொல்லி, ஆரவாரம்பண்ணினார்கள்.

௰. அவர் யெருஷலேமில் பிரவேசித்தபொழுது, நகரத்தாரெல்லாருங் கலங்கி, இவர் ஆர்? என்றார்கள்.

௰க. சனங்களோ இவர் கலிலேயாநாட்டிலுள்ள நாசரேத்திலிருந்து வந்த தீர்க்கதரிசியாகிய யேசுவென்றார்கள்.

௰உ. பின்பு யேசு தேவனுடைய ஆலயத்தில் பிரவேசித்து, அதிலே விற்கிறவர்களுங் கொள்ளுகிறவர்களுமாகிய யாவரையும் வெளியே துரத்தி, காசுக்காரருடைய பீடங்களையும், புறாக்களை விற்கிறவர்களுடைய ஆசனங்களையும் கவிழ்த்துவிட்டு,

௰௩. "என் வீடு பிராத்தனையின் வீடெனப்படும்" என்றெழுதியிருக்கின்றது. நீங்களோ இதைத் திருடர் குகை ஆக்கினீர்களென்று அவர்களுடன் சொன்னார்.

௰௪. பின்பு குருடரும், சப்பாணிகளுந் தேவாலயத்தில் அவரிடத்தில் வந்தார்கள்: அவர் அவர்களைச் சொஸ்தப்படுத்தினார்.

௧௫. அவர் செய்த ஆச்சரியமான கிரியைகளையும், தாவீதின் புத்திரனுக்கு ஓசன்னாவென்று தேவாலயத்தில் உரத்தசத்தமிட்ட பிள்ளைகளையும், பிரதான ஆசாரியரும் வேதபாரகருங் கண்டு, குரோதங் கொண்டு,

௧௬. அவரை நோக்கி, இவர்கள் சொல்வதைக் கேட்கிறீரோவென்று சொல்ல —யேசு, கேட்கிறேன். "பாலகருங் குழந்தைகளுமாகிய இவர்களுடைய வாயினின்றுந் துதியைத் தோற்றுவித்தீர்" என்பதை நீங்கள் ஒருபொழுதும் வாசிக்கவில்லையா? என்று சொல்லி,

௧௭. அவர்களை விட்டு, நகரத்திலிருந்து புறப்பட்டு, பேதனியாவுக்குப்போய், அங்கே இராத்தங்கினார்.

௧௮. காலையில் அவர் நகரத்திற்குத் திரும்பிப் போகையில், அவருக்குப் பசியுண்டாயிற்று.

௧௯. அப்பொழுது வழியருகே ஒரு அத்திமரத்தை அவர் கண்டு, அதினிடத்தில் போய், இலைகளையேயன்றிக் கனிகளைக் காணாமையினால், அதைப் பார்த்து, இதுமுதல் உன்னிடத்தில் கனி உண்டாகாதிருக்கக்கடவதென்றார்: உடனே அத்திமரம் பட்டுப் போயிற்று.

௨௦. சீஷர் அதைக் கண்டு, இந்த அத்திமரம் அதிசீக்கிரமாய்ப் பட்டுப்போயிற்றென்று ஆச்சரியத்தோடே சொன்னார்கள்.

௨௧. யேசு அவர்களை நோக்கி, நீங்கள் சந்தேகப்படாமல் விசுவாசித்தால், இந்த அத்திமரத்துக்குச் சம்பவித்ததைச் செய்வதுமன்றி, இந்த மலையை நோக்கி, நீ பெயர்ந்து, சமுத்திரத்தில் விழுவாயாகவென்று சொன்னாலும், உடனே அப்படியே ஆகுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௨. அல்லாமலும், நீங்கள் விசுவாசத்துடன் வேண்டுதல்செய்து, கேட்பதெதுவோ, அதைப் பெறுவீர்களென்றார்.

௨௩. அவர் தேவாலயத்திலே வந்து உபதேசம் பண்ணுகிறபொழுது, பிரதான ஆசாரியரும், சனங்களின் முதியோரும் அவரிடத்தில் வந்து, எந்த அதிகாரத்தைக்கொண்டு, நீர் இவைகளைச் செய்கிறீர்? இப்படிப்பட்ட அதிகாரத்தை உமக்குத் தந்தவர் யாவர்? என்று கேட்க—

௨௪. யேசு அதற்கு உத்தரமாய், நானும் உங்களிடத்தில் ஒன்றைக் கேட்பேன்: அதை நீங்கள் எனக்குச் சொன்னீர்களானால், நான் இவைகளை இன்ன அதிகாரத்தைக்கொண்டு செய்கிறேனென்று உங்களுக்குத் தெரிவிப்பேன்.

௨௫. யோவான் கொடுத்த ஞானஸ்நானம் ஆராலுண்டாயிற்று? தேவனாலோ? மனுஷராலோ? அதைச் சொல்லுங்களென்றார்: அவர்கள் தங்களுக்குள், அது தேவனால் உண்டாயிற்றென்றோமானால், இவர், ஏன் அவனை விசுவாசிக்கவில்லையென்பார்?

௨௬. அது மனுஷராலுண்டாயிற்றென்று சொல்லவும், சனங்களுக்குப் பயப்படுகிறோம்; அவர்களெல்லாரும் யோவானைத் தீர்க்கதரிசியென்றெண்ணுகிறார்களேயென்று தங்களுக்குள்ளே யோசித்து,

௨௭. அவரை நோக்கி, நாங்கள் சொல்லக்கூடாதென்றார்கள்: அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, நானும் இவைகளை இன்ன அதிகாரத்தைக் கொண்டு செய்கிறேனென்று உங்களுக்குச் சொல்லேன்.

௨௮. ஒரு மனுஷனுக்கு இரண்டுபுத்திரருண்டு: அவர்களில் மூத்தவனிடத்தில் அவன் போய், மக

னே, நீ இன்று என் திராட்சத்தோட்டத்திலே போய், வேலைசெய்யென்று சொல்ல—

உகூ. அவன் போகமாட்டேனென்று சொல்லி, பின்பு அவன் மனந்திரும்பிப் போனான்.

௩௰. பிதா இளையவனிடத்திலும் போய் அப்படியே சொல்ல,—அவன் உத்தரமாக, ஐயா, போகிறேனென்று சொல்லியும் போகவில்லை.

௩க. இவ்விருவரில் யாவன் பிதாவின் சித்தத்தை நிறைவேற்றினான்? உங்களுக்கு எப்படித் தோன்றுகின்றதென்று அவர் கேட்டபொழுது, மூத்தவனே யென்றார்கள்: அப்பொழுது யேசு அவர்களை நோக்கி, ஆயக்காரரும் வேசைகளும் உங்களுக்கு முன் தேவனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கிறார்களென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩உ. யோவான் நீதிமார்க்கமாய் உங்களிடத்தில் வந்தும், நீங்கள் அவனை விசுவாசிக்கவில்லை. ஆயக்காரரும் வேசைகளுமோ அவனை விசுவாசித்தார்கள்; அதை நீங்கள் கண்டும், அதன்பின்னும் விசுவாசிக்கும்படிக்கு மனஸ்தாபப்படவில்லை.

௩௩. வேறொரு உவமையைக் கேளுங்கள்: வீட்டெசமானன் ஒருவன் திராட்சத்தோட்டத்தை உண்டாக்கி, அதைச் சுற்றி வேலி அடைத்து, அதில் ஆலையை நாட்டி, கோபுரத்தைக் கட்டி, பின்பு அதைத் தோட்டக்காரர் வசமாய்விட்டு, புறத்தேசத்திற்குப் போனான்.

௩ச. கனிகாலஞ் சமீபமானபொழுது, கனிகளை வாங்கிக்கொண்டு வரும்படிக்குத் தன் வேலைக்காரரைத் தோட்டக்காரரிடத்தில் அனுப்பினான்.

௩ரு. தோட்டக்காரர், அவன் வேலைக்காரரைப் பிடித்து, ஒருவனை அடித்தார்கள்; ஒருவனைக் கொ

லைசெய்தார்கள்; வேறொருவன்மேற் கல்லெறிந்தார்கள்.

௩௬. திரும்பவும் எசமானன் முந்தினவர்களிலும் அதிகமான வேறு வேலைக்காரரை அனுப்பினான். அவர்களையும் அப்படியே செய்தார்கள்.

௩௭. பின்பு அவன் என் புத்திரனுக்கு அஞ்சுவார்களென்றெண்ணி, கடைசியிலே தன் புத்திரனை அவர்களிடத்தில் அனுப்பினான்.

௩௮. தோட்டக்காரரோ, புத்திரனைக் கண்டபொழுது, இவன் சுதந்தரவாளி: இவனைக் கொன்று, இவனுடைய சுதந்தரத்தைக் கட்டிக்கொள்வோம், வாருங்களென்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டு,

௩௯. அவனைப் பிடித்து, திராட்சத்தோட்டத்திற்குப் புறம்பே தள்ளிக் கொலைசெய்தார்கள்.

௪௰. ஆதலால் அந்தத் திராட்சத்தோட்டத்தின் எசமானன் வரும்பொழுது, அந்தத் தோட்டக்காரருக்கு என்னசெய்வான்? என்று கேட்டார்.

௪௧. அதற்கு அவர்கள் அந்தத் துஷ்டரைக் கொடுமையாய் அழித்து, பருவகாலங்களில் தனக்குக் கனிகளைக் கொடுக்கும் வேறு தோட்டக்காரர் வசமாய்த் திராட்சத்தோட்டத்தை விடுவானென்றார்கள்.

௪௨. அப்பொழுது யேசு அவர்களை நோக்கி, "வீடு கட்டுகிறவர்கள் தள்ளிவிட்ட கல் கோடிக்குத் தலைக்கல்லாயிற்று: இது கர்த்தாவினால் நடந்தது; இது நம்முடைய பார்வைக்கு அற்புதம்" என்று வேதத்தில் நீங்கள் ஒருபொழுதும் வாசிக்கவில்லையா?

௪௩. ஆகையால் தேவனுடைய இராச்சியம் உங்
களிடத்திலிருந்து நீக்கப்பட்டு, அதின் கனிகளைத்
தருஞ் சாதியாருக்கு அருளப்படுமென்று உங்களுக்
குச் சொல்லுகிறேன்.
௪௪. அன்றியும் இந்தக் கல்லின்மேல் விழுகிற
வன் நொறுக்கப்படுவான்; இது எவன்மேல் விழு
மோ, அவனை நொறுக்குமென்றார்.
௪௫. பிரதான ஆசாரியரும், பரிசேயரும் அவரு
டைய உவமைகளைக் கேட்டு, தங்களைக் குறித்துப்
பேசினாரென்றுணர்ந்து,
௪௬. அவரைப் பிடிக்க வகைதேடியும், சனங்கள்
அவரைத் தீர்க்கதரிசியென்று எண்ணினபடியினால்,
அவர்களுக்குப் பயந்தார்கள்.

---

## ௨௨. அதிகாரம்.

௧. இராசபுத்திரனுடைய விவாகத்தை உவமித்தல்: ௰௫. இராசாவுக்கு வரிப்பணங்கொடுப்பதைப்பற்றிப் போதித்தல்: ௨௩. மரித்தோர் உயிர்த்தெழுதலைக் குறித்துப் போதித்தல்: ௩௪. பிரதான கட்டளை இன்னதென்று நிருணித்தல்: ௪௧. கிறிஸ்து தம்மைக்குறித்துப் பரிசேயரை மவுனமாக்கல்.

௧. பின்பு யேசு உவமைகளினால் அவர்களிடத்
தில் பேசி,
௨. பரம இராச்சியம் தன் புத்திரனுக்கு விவாகஞ்
செய்த இராசனுக்கொப்பாயிருக்கின்றது.
௩. அழைக்கப்பட்டவர்களை விவாகத்துக்கு வரச்
சொல்லும்படி, அவன் தன் பணிவிடைக்காரரை
அனுப்பினான்: அவர்களோ வரமாட்டோமென்றார்
கள்.
௪. மறுபடியும் அவன் வேறே பணிவிடைக்கா
ரரை அனுப்பி, என் விருந்தை ஆயத்தப்படுத்தி

னேன்; என் எருதுகளும், புஷ்டியான செந்துக்களும் அடிக்கப்பட்டன: எல்லாம் ஆயத்தமாயிருக்கின்றன; நீங்கள் விவாகத்துக்கு வாருங்களென்று அழைக்கப்பட்டவர்களிடத்தில் சொல்லுங்களென்றான்.

௫. அவர்களோ அதை எண்ணுமல், ஒருவன் தன் வயலுக்கும், ஒருவன் தன் வியாபாரத்துக்கும் போய் விட்டார்கள்.

௬. மற்றவர்களோ, அவனுடைய வேலைக்காரரைப் பிடித்து, நிந்தித்து, கொலைசெய்தார்கள்.

௭. இராசா அதைக் கேட்டு, கோபங்கொண்டு, தன் சேனைகளை அனுப்பி, அந்தக் கொலைபாதகரைச் சங்கரித்து, அவர்களுடைய பட்டணத்தையுந் தகித்துப்போட்டான்.

௮. பின்பு அவன் தன் பணிவிடைக்காரரை நோக்கி, விவாகவிருந்து ஆயத்தமாயிருக்கின்றது. அழைக்கப்பட்டவர்களோ அதற்குப் பாத்திரரல்ல.

௯. ஆதலால் நீங்கள் வழிச்சந்திகளிலே போய், அகப்படும் யாவரையும் விவாகத்திற்கு அழைத்துவாருங்களென்றான்.

௰. அதினல் அந்தப் பணிவிடைக்காரர் வீதிகளிற் சென்று, அகப்பட்ட தீயவர்களையும், நல்லவர்களையுங் கூட்டிவந்தார்கள்: விருந்துசாலை பந்தியிருக்கிறவர்களால் நிறைந்தது.

௰௧. பந்தியிருக்கிறவர்களைப் பார்க்கும்படி இராசா பிரவேசித்தபொழுது, விவாகவஸ்திரந் தரியாத ஒருவனை அங்கே கண்டு,

௰௨. சிநேகிதா, நீ விவாகவஸ்திரமில்லாமல் இவ்விடத்தில் எப்படிப் பிரவேசித்தாயென்று கேட்க—இவன் பேசாமலிருந்தான்.

௰௩. அப்பொழுது இராசா பணிவிடைக்காரரை நோக்கி, இவனுடைய கைகால்களைக் கட்டி, எடுத்துக்கொண்டுபோய், அழுகையும், பற்கடிப்பும் உண்டாகும் புறம்பான இருளிலே தள்ளிவிடுங்களென்று கட்டளையிட்டான்.

௰௪. அழைக்கப்பட்டவர்கள் அநேகர், தெரிந்து கொள்ளப்பட்டவர்களோ சிலரென்றார்.

௰௫. பின்பு பரிசேயர் போய், வாக்குகளில் அவரை அகப்படுத்தும்படி ஆலோசனைபண்ணி,

௰௬. தங்கள் சீஷரில் சிலரையும், ஏரோதின் சனங்களையும் அவரிடத்திற்கு அனுப்பினார்கள். அவர்கள் போதகரே, நீர் சத்தியமுள்ளவர்; பாரபட்சமில்லாமலும், எவர்களுடைய முகத்தையும் பாராமலும், தேவன் அருளிய மார்க்கத்தை உண்மையாய்த் தெரியக் காட்டுகிறீரென்று அறிந்திருக்கிறோம்.

௰௭. ஆதலால் இராசாவுக்கு வரிகொடுப்பது நியாயமோ? இல்லையோ? அதை எங்களுக்குச் சொல்லவேண்டும்: உமக்கெப்படித் தோன்றுகின்றதென்றார்கள்.

௰௮. யேசு அவர்களுடைய துர்க்குணத்தை அறிந்து, கபடிகளே, நீங்கள் என்னை என் சோதிக்கிறீர்கள்?

௰௯. வரிக்காசை எனக்குக் காண்பியுங்களென்றார்: அப்பொழுது அவர்கள் ஒரு தேனாரியப்பணத்தை அவரிடத்திற் கொண்டுவந்தார்கள்.

௨௰. அவர் இந்தச் சாயலும் மேலெழுத்தும் ஆருடையதென்று கேட்க,— அவர்கள் இது இராசாவுடையதென்றார்கள்.

௨௧. அப்பொழுது அவர், இராசாவுடையதை இராசாவுக்கும், தேவனுடையதைத் தேவனுக்குஞ் செலுத்துங்களென்றார்.

௨௨. அவர்கள் அதைக் கேட்டு, ஆச்சரியப்பட்டு, அவரை விட்டுப்போனார்கள்.

௨௩. உயிர்த்தெழுதலில்லையென்று சொல்லுகிற சதுசேயர் அந்நாளில் அவரிடத்தில் வந்து,

௨௪. போதகரே, புருஷன் ஒருவன் பிள்ளைகளில்லாமல் இறந்துபோனால், அவனுடைய சகோதரன் அவனுக்குச் சந்ததி தோன்றும்படி, அவனுடைய மனைவியை விவாகம்பண்ணவேண்டுமென்று மோசே சொன்னாரே.

௨௫. எங்களிடத்தில் சகோதரர் ஏழுபேரிருந்தார்கள்: அவர்களில் மூத்தவன் விவாகம்பண்ணிச் சந்ததியில்லாமல் மரித்து, தன் மனைவியைத் தன் சகோதரனுக்கு விட்டான்.

௨௬. இரண்டாம் மூன்றாஞ் சகோதரன் முதல், ஏழாஞ் சகோதரன் வரைக்கும் அப்படியே நடந்தது.

௨௭. எல்லாருக்கும் பின்பு அந்த ஸ்திரியும் இறந்துபோனாள்.

௨௮. ஆகையால் உயிர்த்தெழுதலில் அவள் அவர்கள் ஏழுவரில் யாவனுக்கு மனைவியாவாள்? எல்லாரும் அவளை விவாகம்பண்ணினார்களே என்று சொல்லிக்கேட்டார்கள்.

௨௯. யேசு அவர்களுக்குத்தரமாக, நீங்கள் வேதத்தையும், தேவனுடைய வல்லமையையும் உணராதபடியால், தப்பாய் எண்ணங்கொள்ளுகிறீர்கள்.

௩௰. உயிர்த்தெழுதலில் பெண்கொள்வதுங் கொடுப்பதுமில்லை: அவர்கள் பரமண்டலத்திலுள்ள தேவனுடைய தூதரைப்போலிருக்கிறார்கள்.

௩௧. மரித்தோர் உயிர்த்தெழும்புவதைக் குறித்து, நான் ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனுமாயிருக்கிறேனென்று,

௩௨. தேவனால் உங்களுக்குச் சொல்லப்பட்டதை நீங்கள் வாசிக்கவில்லையா? அவர் மரித்தோரின் தேவனல்ல; சீவனுள்ளோரின் தேவனேயென்றார்.

௩௩. சனங்கள் இதைக்கேட்டு அவருடைய உபதேசத்தைக் குறித்துப் பிரமித்தார்கள்.

௩௪. அவர் சதுசேயரை மவுனமாக்கினதைப் பரிசேயர் கேட்டுக் கூடிவந்தார்கள்.

௩௫. அவர்களில் நியாயசாஸ்திரி ஒருவன் அவரைச் சோதிக்கும்படி,

௩௬. போதகரே, வேதப்பிரமாணத்தில் எந்தக் கட்டளை பிரதானமென்று கேட்க,—

௩௭. யேசு அவனைப் பார்த்து, "நீ உன் பூரண இருதயத்தோடும், உன் பூரண ஆத்துமாவோடும், உன் பூரண மனதோடும், உன் தேவனாகிய கர்த்தாவிடத்தில் அன்புகூருவாயாக" என்கிற

௩௮. இதுவே முதலும், பிரதானமுமான கட்டளை.

௩௯. இதற்குச் சமமான இரண்டாங் கட்டளை, "உன்னைப்போலப் பிறனையும் நேசிப்பாயாக" என்பது.

௪௰. இவ்விரண்டு கட்டளைகளிலும் நியாயப்பிரமாணம் முழுமையும், தீர்க்கதரிசனங்களும் அடங்குமென்றார்.

௪௧. பின்பு பரிசேயர் கூடியிருக்கையில், யேசு அவர்களை நோக்கி,

௪௨. நீங்கள் கிறிஸ்துவைப்பற்றி என்னத்தைக் கருதிக்கொள்ளுகிறீர்கள்? அவர் ஆருடைய புத்திர னென்று கேட்க,—அவர் தாவீதின் புத்திரனென்றார் கள்.

௪௩. அதற்குத்தரமாய், அவர், "கர்த்தர் என் ஆண் டவரை நோக்கி, நான் உம்முடைய சத்துருக்களை உமது பாதபீடமாக்கும்வரைக்கும்,

௪௪. நீர் என் வலதுபாரிசத்தில் வீற்றிருமென் றார்" என்று தாவீது தேவாவியினால் அவரை ஆண் டவரென்று சொல்லியிருக்கிறதெப்படி?

௪௫. தாவீது அவரைக் கர்த்தரென்று சொல்லியி ருக்க,—அவர் எப்படி அவனுடைய புத்திரனாயிருப் பாரென்றார்.

௪௬. அதற்குத்தரமாக, ஒருவனும் ஒரு வாக்கை யுஞ் சொல்லக்கூடாமற்போயிற்று: அந்நாள்முதல் ஒருவரும் அவரிடத்தில் வினவத் துணியவில்லை.

---

## ௨௩. அதிகாரம்.

௧. வேதபாரகரையும் பரிசேயரையுமல்ல, வேதோபதேசத்தைப்பற்றி நடக்கும் படி சனங்களுக்குப் போதித்தல்: ௰௩. அவர்களுக்கு நேரிடும் ஆபத்தைத் தெரி வித்தல்: ௩௪. யெருஷலேமின் சங்காரத்தைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ் சொல் லல்.

௧. பின்பு யேசு சனங்களையுந் தம்முடைய சீஷ ரையும் நோக்கி,

௨. வேதபாரகரும் பரிசேயரும், மோசேயின் ஆசனத்திலிருக்கிறார்கள்.

௩. ஆதலால் நீங்கள் கைக்கொள்ளவேண்டுமென் று அவர்கள் உங்களுக்குச் சொல்லும் யாவையுங் கைக்கொண்டு, நடக்கக்கடவீர்கள்: அவர்களுடைய

கிரியைகளின்படியோ செய்யாதிருங்கள்: அவர்கள் பேசுகிறதேயன்றிச் செய்கிறதில்லை.

௪. சுமப்பதற்கரிய பாரமான சுமைகளைக் கட்டி மனுஷருடைய தோள்களின்மேல் ஏற்றுகிறார்கள்: தாங்களோ ஒரு விரலினாலும் அவைகளை அசைக்க மாட்டார்கள்.

௫. மனுஷரால் காணப்படும்படி அவர்கள் தங்கள் கிரியைகள் யாவையுஞ் செய்கிறார்கள்: வேதவசனம் பதிந்த காப்புகளை அகலமாக்கி, தங்கள் வஸ்திரங்களின் தொங்கல்களை விஸ்தாரம்பண்ணி,

௬. விருந்துகளில் பிரதான இடங்களையும், ஆலயங்களில் முதல் ஆசனங்களையும்,

௭. சந்தைகளில் வாழ்த்துதல்களையும், மனுஷரால் இரபீ, இரபீ, என்றழைக்கப்படுதலையும் விரும்புகிறார்கள்.

௮. நீங்களோ இரபீ, என்றழைக்கப்படவேண்டாம்: உங்களுக்கு ஒரே குருவுண்டு: அவரே கிறிஸ்து.

௯. நீங்கள் பூமண்டலத்தில் ஒருவனையும் பிதாவேயென்று சொல்லலாகாது; ஒருவரே உங்களுக்குப் பிதா: பரமண்டலத்திலுள்ளவர் அவரே: நீங்களெல்லாருஞ் சகோதரர்.

௰. நீங்கள் குருக்களென்னும் பேரைத் தரிக்கலாகாது: உங்களுக்கு ஒரே குருவுண்டு: அவரே கிறிஸ்து.

௰௧. உங்களெல்லாரிலும் பெரியவன் உங்களுக்குப் பணிவிடைக்காரனாகக்கடவன்.

௰௨. தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான்; தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான்.

௰௩. ஐயோ! கபடிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஆபத்துவரும். மனுஷர் பரமஇராச்சியத்திற் பிரவேசியாதபடி நீங்கள் அதைப் பூட்டிப்போடுகிறீர்கள்: நீங்கள் அதிற் பிரவேசிப்பதுமில்லை; பிரவேசிக்க விரும்புகிறவர்களைப் பிரவேசிக்க விடுவதுமில்லை.

௰௪. ஐயோ! கபடிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஆபத்துவரும். நீங்கள் விதவைகளின் வீடுகளைப் பட்சித்து, கபடமாக நெடும் பிரார்த்தனைகளைச் செய்கிறீர்கள்: இதினிமித்தம் அதிக தண்டனை உங்களுக்குக் கிடைக்கும்.

௰௫. ஐயோ! கபடிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஆபத்துவரும். நீங்கள் உங்கள் மதத்தில் ஒருவனைச் சேர்க்கும்படி, கடலையுந் தரையையும் கடந்து திரிகிறீர்கள்: அவன் சேர்க்கப்பட்டபின்பு, நீங்கள் உங்களிலும் அவனை இருமடங்கு நரகத்துக்குப் பாத்திரனாக்குகிறீர்கள்.

௰௬. ஐயோ! குருடரான வழிகாட்டிகளே, உங்களுக்கு ஆபத்துவரும். ஒருவன் தேவாலயத்தைக்கொண்டு சத்தியம்பண்ணினால், அது ஒன்றுமில்லை; ஒருவன் தேவாலயத்திலுள்ள பொன்னைக்கொண்டு சத்தியம்பண்ணினானேயாகில், அவன் கடனாளியென்கிறீர்கள்.

௰௭. மூடரே, குருடரே, எது முக்கியம்? பொன்னோ? அந்தப் பொன்னைப் பரிசுத்தப்படுத்துந் தேவாலயமோ?

௰௮. ஒருவன் வேதிகையைக்கொண்டு சத்தியம்பண்ணினால், அது ஒன்றுமில்லை; அதிலுள்ள நைவேத்தியத்தைக்கொண்டு சத்தியம்பண்ணினானாகில் அவனே கடனாளியென்கிறீர்கள்.

௰௯. மூடரே, குருடரே, எது முக்கியம்? நைவேத்தியமோ? நைவேத்தியத்தைப் பரிசுத்தப்படுத்தும் வேதிகையோ?

௨௰. ஆதலால் வேதிகையைக்கொண்டு சத்தியம் பண்ணுகிறவன் அதைக்கொண்டும், அதிலுள்ள சமஸ்த பொருளைக்கொண்டுஞ் சத்தியம்பண்ணுகிறான்.

௨௧. தேவாலயத்தைக்கொண்டு சத்தியம்பண்ணுகிறவன் அதைக்கொண்டும், அதில் வாசமாயிருப்பவரைக்கொண்டுஞ் சத்தியம்பண்ணுகிறான்.

௨௨. வானத்தைக்கொண்டு சத்தியம்பண்ணுகிறவன் தேவனுடைய சிங்காசனத்தைக்கொண்டும், அதில் வீற்றிருப்பவரைக்கொண்டுஞ் சத்தியம்பண்ணுகிறான்.

௨௩. ஐயோ! கபடிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஆபத்துவரும். நீங்கள் துளசியிலும், வெந்தையத்திலும், சீரகத்திலும் பத்திலொருபாகத்தைக் கொடுத்தும், வேதத்திலுள்ள பாரமானவைகளாகிய நீதியையும், இரக்கத்தையும், விசுவாசத்தையும் விட்டுவிட்டீர்கள். இவைகளைக் காத்து நடப்பதும், இவைகளை மீறாமல் நிற்பதுமே, உங்கள் கடமை.

௨௪. குருடரான வழிகாட்டிகளே, கொசுகுக்கு வடிகட்டி, ஒட்டகத்தை விழுங்குகிறீர்கள்.

௨௫. ஐயோ! வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஆபத்துவரும். நீங்கள் போசனபானபாத்திரங்களின் வெளிப்புறத்தைச் சுத்தஞ்செய்கிறீர்கள்: அவைகளின் உட்புறமோ கொள்ளையினாலும் அநீதியினாலும் நிறைந்திருக்கின்றது.

௨௬. குருடான பரிசேயனே, முதலாவது போசனபான பாத்திரங்களின் உட்புறத்தைச் சுத்தம்பண்

ணு: அப்பொழுது அவைகளின் வெளிப்புறமுஞ் சுத்தமாகும்.

உ௭. ஐயோ! கபடிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஆபத்துவரும். நீங்கள் வெள்ளை அடிக்கப்பட்ட பிரேத அறைகளுக்குச் சமானமாயிருக்கிறீர்கள்: அவைகளின் வெளிப்புறம் அலங்காரமுள்ளது; உள்ளே மரித்தோருடைய எலும்புகளும், சகலவித அசுசியும் நிறைந்திருக்கின்றன.

உ௮. அப்படியே நீங்களும் புறம்பே மனுஷருக்கு நீதிமான்களென்று காணப்படுகிறீர்கள். உங்கள் உள்ளமோ சூதினாலும், அநீதியினாலும் நிறைந்திருக்கின்றது.

உ௯. ஐயோ! கபடிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஆபத்துவரும். நீங்கள் தீர்க்கதரிசிகளுடைய பிரேத அறைகளைக் கட்டி, நீதிமான்களின் பிரேத அறைகளைச் சிங்காரித்து,

௩௰. நாம் நம்முடைய முன்னோரின் காலத்தில் இருந்தோமானால், தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தைச் சிந்த உடன்படமாட்டோம் என்கிறீர்கள்.

௩௧. இவ்விதமாய் நீங்கள் தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்தவர்களின் சந்ததியாரென்று உங்களைக் குறித்து நீங்களே சாட்சியிடுகிறீர்கள்.

௩௨. ஆதலால் நீங்கள் உங்கள் முன்னோருடைய அளவை நிரப்புங்கள்.

௩௩. ஆ! சருப்பங்களே, விரியன் குட்டிகளே, நீங்கள் எப்படி நரக யாதனைக்குத் தப்புவீர்கள்?

௩௪. ஆதலால் பாருங்கள், நான் உங்களிடத்தில் தீர்க்கதரிசிகளையும், ஞானவான்களையும், வேதபார

களையும் அனுப்புகிறேன். நீங்கள் அவர்களிற் சிலரைக் கொலைசெய்வீர்கள்; சிலுவையில் அறைவீர்கள்; சிலரை உங்கள் ஆலயங்களில் வாரினால் அடிப்பீர்கள்; ஊருக்கூர் துன்பப்படுத்துவீர்கள்.

௩௫. நீதிமானாகிய ஆபேலின் இரத்தம்முதல், நீங்கள் தேவாலயத்துக்கும், வேதிகைக்கும் இடையிலே கொலைசெய்த பெரிகாயாவின் புத்திரனாகிய சகரியாவின் இரத்தம்வரைக்கும், பூமியில் சிந்தப்பட்ட நீதியான எல்லா இரத்தப்பழியும் உங்கள்மேல் வரும்.

௩௬. இவையெல்லாம் இந்தச் சந்ததியின்மேலே வருமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௭. யெருஷலேமே, யெருஷலேமே, தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்து, உன்னிடத்தில் அனுப்பப்பட்டவர்கள்மேல் கல்லெறிகிறவளே, கோழி தன் குஞ்சுகளைச் சிறகுகளின் கீழே கூட்டிச் சேர்த்துக்கொள்ளும் வண்ணமாக, அநேகந்தரம் உன் பிள்ளைகளைச் சேர்த்துக்கொள்ள விரும்பினேன்: நீயோ சம்மதிக்கவில்லை.

௩௮. பாருங்கள், உங்கள் வாசஸ்தலம் உங்களுக்குப் பாழாய் விடப்படும்.

௩௯. கர்த்தருடைய நாமத்தினாலே வருபவர் ஸ்தோத்திரிக்கப்படக்கடவரென்று நீங்கள் சொல்லும்வரைக்கும், இதுமுதல் என்னைக் காணாதிருப்பீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.



# உச. அதிகாரம்.

க. தேவாலயத்தின் நாசத்தை முன்னுரைத்தல்: ௩. அழியுஞ் சமயத்திலுண்டான அடையாளங்களைத் தெரிவித்தல்: ௯. சீஷர் துயரப்படல்: ௰௫. சனங்கள் தப்பியோடல்: உ௩. கள்ளத்தீர்க்கதரிசிகள் தோன்றல்: உ௯. யூதேயா தேசத்தின் நிலைமையைத் தெரிவித்தல்: ௩உ. அத்திமரத்தைக் குறித்த உவமையைச் சொல்லல்: ௩௯. சலப்பிரளய காலத்தைப்போன்ற உபத்திரவமுண்டாதல்: சஉ. விசாரம் அவசியமெனக் காட்டல்: ச௫. உண்மையுள்ள தாசனையும் உண்மையில்லாத தாசனையும் உவமித்தல்.

க. யேசு தேவாலயத்தை விட்டுப் புறப்படுகிற பொழுது, அவருடைய சீஷர் சேர்ந்து, தேவாலயங் கட்டியிருக்கிறவைகளை அவருக்குக் காண்பித்தார்கள்.

உ. யேசு அவர்களை நோக்கி, இவைகளெல்லாவற்றையும் பார்க்கிறீர்களல்லவா? இடிபடாததாய் ஒரு கல்லும் மற்றொரு கல்லின்மேல் விடப்படுவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௩. பின்பு அவர் ஒலீவமலையின்மேல் உட்காந்திருக்கையில், சீஷர் அவரிடத்தில் தனித்து வந்து, இவை எப்பொழுது நடக்கும்? நீர் வருவதற்கும், உலகத்தின் முடிவுக்கும் அடையாளம் யாது? நீர் இவைகளை எங்களுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று சொல்ல,—

ச. அவர்களுக்குத்தரமாக யேசு, அநேகர் வந்து, என் நாமத்தைத் தரித்து, தங்களைக் கிறிஸ்துவென்று சொல்லி, அநேகரை வஞ்சிப்பார்கள்.

௫. ஆகையால் ஒருவனும் உங்களை வஞ்சியாதபடிக்கு நீங்கள் சாவதானமாயிருங்கள்.

௬. அன்றியும், யுத்தங்களையும், யுத்தச்செய்திகளையுங் கேட்பீர்கள்: நீங்கள் கலங்காதபடி சாவதானமாயிருங்கள்: இவையெல்லாம் நடப்பது அவசியம்: ஆனாலும் முடிவு உடனே வராது.

௭. ஒரு தேசத்தார் மறுதேசத்தாருக்கும், ஒரு இராச்சியத்தார் மறு இராச்சியத்தாருக்கும் விரோதமாய் எழும்புவார்கள்: பஞ்சமும், பெருவாரிக்காய்ச்சலும், பூமி அதிர்தலும் அங்கங்கே உண்டாகும்.

௮. இவைகளெல்லாம் உபத்திரவங்களின் ஆரம்பம்.

௯. அப்பொழுது உபத்திரவப்படும்படி உங்களை ஒப்பித்து, உங்களைக் கொலைசெய்வார்கள்: என் நாமத்தினிமித்தம் நீங்கள் சகல தேசத்தாராலும் பகைக்கப்படுவீர்கள்.

௰. அக்காலத்தில் அநேகர் இடறுண்டு, ஒருவனை ஒருவர் ஒப்பித்து, ஒருவனை ஒருவர் பகைப்பார்கள்.

௰௧. அநேகங் கள்ளத்தீர்க்கதரிசிகள் எழும்பி, அநேகனை வஞ்சிப்பார்கள்.

௰௨. அக்கிரமம் மிகுதியாவதினால் அநேகருடைய அன்பு தணிந்துபோம்.

௰௩. முடிவுபரியந்தம் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படுவான்.

௰௪. சகல தேசத்தாருக்குஞ் சாட்சியாய் இராச்சியத்தின் இந்தச் சுவிசேஷம் பூமியில் எங்கும் பிரசங்கிக்கப்படும்: அப்பொழுது முடிவுவரும்.

௰௫. ஆதலால் வாசிக்கிறவன் சிந்திக்கக்கடவன்.

௰௬. தானியேல் தீர்க்கதரிசி குறித்துச்சொல்லிய சருவசங்கார அரோசியமான வஸ்து பரிசுத்த ஸ்தானத்திலே நிற்க நீங்கள் காணும்பொழுது, யூதேயா

தேசத்திலுள்ளவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகக் கடவர்கள்.

௰௭. வீட்டின்மேல் நிற்கிறவன் தன் வீட்டிலுள்ளவைகளை எடுத்துக்கொண்டு போகும்படி இறங்க வேண்டாம்.

௰௮. வயலில் இருப்பவன் தன் வஸ்திரங்களை எடுத்துக்கொள்ளும்படி பின்னிட்டுத் திரும்பலாகாது.

௰௯. ஐயோ! அந்நாட்களில் கருப்பவதிகளுக்கும், முலைகொடுக்கும் ஸ்திரிகளுக்கும் ஆபத்துவரும்.

௨௰. உலகமுண்டானதுமுதல் இதுவரைக்கும் நடவாததும், இனி ஒருபொழுதும் நடவாமலிருப்பதுமாகிய மிகுந்த உபத்திரவம் அக்காலத்தில் உண்டாகும்.

௨௧. ஆதலால் நீங்கள் ஓடிப்போவது மாரிகாலத்திலாகிலும், ஓய்வுநாளிலாகிலுஞ் சம்பவியாதபடிக்கு வேண்டுதல்பண்ணுங்கள்.

௨௨. அந்நாட்களின் தொகை குறைக்கப்படாதிருந்தால், ஒரு பிராணியுந் தப்புவதில்லை: தெரிந்துகொள்ளப்பட்டவர்களினிமித்தமே அந்நாட்களின் தொகை குறைக்கப்படும்.

௨௩. அக்காலத்திலே கள்ளக் கிறிஸ்துக்களும், கள்ளத் தீர்க்கதரிசிகளுந் தோன்றி, தங்களால் கூடுமாகில், தெரிந்துகொள்ளப்பட்டவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக, மிகுந்த அடையாளங்களையும் அற்புதங்களையுங் காட்டுவார்கள்.

௨௪. ஆதலால் ஒருவன் உங்களிடத்தில், பாருங்கள், கிறிஸ்து இங்கே இருக்கிறார், அங்கே இருக்கிறாரென்றால், நீங்கள் நம்பாதிருங்கள்.

௨௫. பாருங்கள், நான் முன்னமே உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

௨௬. பாருங்கள், அவர் வனத்திலிருக்கிருரென்ருல், வெளியே புறப்படாதிருங்கள்.

௨௭. பாருங்கள், வீட்டின் உள்ளறைக்குள் இருக்கிருரென்ருல், அதை நம்பாதிருங்கள்: மின்னல் கிழக்கிலே தோன்றி, மேற்குவரைக்கும் பிரகாசிப்பதுபோல மனுபுத்திரன் வருவான்.

௨௮. பிணமெங்கேயோ, அங்கே கழுகுகளுங் கூடிவரும்.

௨௯. உபத்திரவமுள்ள அந்நாட்கள் கழிந்தவுடனே சூரியன் இருளடையும்; சந்திரன் ஒளிகொடாது; நட்சத்திரங்கள் வானத்தினின்று உதிரும்; வானத்தின் வலிமையுள்ள வஸ்துக்கள் அசைக்கப்படும்.

௩௰. அப்பொழுது மனுபுத்திரனுடைய அடையாளம் வானத்திலே காணப்படும்: மனுபுத்திரன் பராக்கிரமத்தோடும், மகா மகிமையோடும் வானத்தின் மேகங்களில் வருவதைப் பூமியிலுள்ள சகல வமிசத்தாருங் கண்டு, புலம்புவார்கள்.

௩௧. உரத்த சத்தமாய்த் தொனிக்கும் எக்காளத்துடனே தம்முடைய தூதரை அனுப்புவான்: அவர்கள் வானத்தின் ஒரு எல்லை தொடங்கி மறு எல்லைவரைக்கும், நாலு திசையிலும் நின்று அவனுலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களைச் சேர்ப்பார்கள்.

௩௨. அத்திமரத்தினுல் ஒரு திருஷ்டாந்தத்தைக் கற்றுக்கொள்ளுங்கள்: அதின் கிளைகள் துளிர்த்து, இலைகள் தழைக்கிறபொழுது, வசந்தகாலஞ் சமீபித்துவந்ததென்று உங்களுக்குத் தெரியும்.

௩௩. அப்படியே இவைகளெல்லாவற்றையும் நீங்கள் காணும்பொழுது, அவன் சமீபித்து, வாசற்படியிலே வந்துவிட்டானென்று அறியக்கடவீர்கள்.

௩௪. இந்தச் சந்ததி ஒழிந்துபோகுமுன், இவைகளெல்லாஞ் சம்பவிக்குமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௫. வானமும் பூமியும் ஒழிந்துபோம்; என் வாக்குகளோ, ஒருபொழுதும் ஒழியாமலிருக்கும்.

௩௬. அந்நாளையும், அந்நாழிகையையும் என் பிதா ஒருவரேயன்றி, வேறொருவரும் அறியார்: பரமண்டலத்திலுள்ள தேவதூதர்களும் அதை அறியார்கள்.

௩௭. நோவாவின் காலத்தில் நடந்ததுபோல, மனுபுத்திரன் வருங்காலத்திலும் நடக்கும்.

௩௮. சலப்பிரளயத்துக்கு முன்னான நாட்களில், நோவா பேழையிற் பிரவேசித்த நாள்வரைக்கும், சனங்கள் போசனபானம்பண்ணியும்,

௩௯. பெண்கொண்டும், பெண்கொடுத்தும், சலப்பிரளயம் வந்து அனைவரையுங் கொண்டுபோகும்வரைக்கும் உணராதிருந்தார்கள்: மனுபுத்திரன் வரும்பொழுதும் அதுபோல நடக்கும்.

௪௰. அந்தச் சமயத்தில் இரண்டு புருஷர் வயலில் இருப்பார்கள். அவர்களில் ஒருவன் அகப்படுவான்; மற்றவன் விடப்படுவான்.

௪௧. இரண்டு ஸ்திரீகள் திரிகை திரித்துக்கொண்டிருப்பார்கள். அவர்களில் ஒருத்தி அகப்படுவாள்; ஒருத்தி விடப்படுவாள்.

௪௨. உங்கள் எசமானன் வரும் நாழிகையை நீங்கள் அறியீர்கள்; ஆதலால் விழித்திருக்கக்கடவீர்கள்.

சா௩. திருடன் வருஞ் சாமத்தை வீட்டெசமானன் அறிந்தால், தன் வீடு கன்னமிடப்படாதபடிக்கு அவன் விழித்துக்கொண்டிருப்பானென்று அறிந்திருக்கிறீர்கள்.

சச. மனுபுத்திரன் நீங்கள் எதிர்பார்த்திராத நாழிகையில் வருவான்; ஆதலால் நீங்களும் ஆயத்தமாயிருக்கக்கடவீர்கள்.

சரு. எசமானன், தன் வீட்டாருக்குத் தகுந்த சமயத்திலே போசனங் கொடுக்கும்படி, அவர்களின்மேல் விசாரணைக்காரனாக வைத்த உண்மையும் புத்தியுமுள்ள பணிவிடைக்காரன் யாவன்?

சசா. எசமானன் தான் வரும்பொழுது அந்தப்பிரகாரஞ் செய்யக் காண்கிற பணிவிடைக்காரனே வாழ்வுடையவன்.

சஎ. தன் பொருள்கள் எல்லாவற்றிற்கும் அதிகாரியாக அவனை ஏற்படுத்துவானென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

சஅ. அந்தப் பணிவிடைக்காரன் துஷ்டனாய், என் எசமானன் திரும்பிவரத் தாமதப்படுவானென்று எண்ணி,

சகூ. தன்னோடே பணிவிடை செய்பவர்களை அடிக்கத்தொடங்கி, வெறியரோடே புசித்துக்குடித்து இருப்பானானால்,

ரு௰. அவன் எசமானன், அந்தப் பணிவிடைக்காரன் எதிர்பார்த்திராத நாளிலும், அறியாத நேரத்திலும் வந்து, அவனைக் கடினமாய்த் தண்டித்து,

ருக. அழுகையும் பற்கடிப்புமுள்ள இடத்திலே கபடிகளோடே அவனுடைய பங்கை ஏற்படுத்துவான்.

# உரு. அதிகாரம்.

க. பத்துக்கன்னியரை உவமித்தல்; ௰ச. தூரதேசத்துக்குப் பிரயாணமாய்ப்போன மனுஷன் கொடுத்த தாலந்துகளை உவமித்தல்; ௩௪. நடுத்தீர்வைநாளின் விசேஷங்களைத் தெரிவித்தல்.

க. அப்பொழுது பரம இராச்சியம், தங்கள் தீவர்த்திகளைப் பிடித்துக்கொண்டு, மணவாளனை எதிர்கொள்ளப் புறப்படுகிற பத்துக் கன்னியருக்கொப்பாகும்.

உ. அவர்களில் ஐந்துபேர் புத்தியுள்ளவர்கள்; ஐந்துபேர் புத்தியீனர்.

௩. புத்தியீனர் தங்கள் தீவர்த்திகளை எடுத்தும் எண்ணெயைக் கூடக் கொண்டுபோகவில்லை.

ச. புத்தியுள்ளவர்களோ, தங்கள் தீவர்த்திகளோடே, தங்கள் பாத்திரங்களில் எண்ணெயையுங் கொண்டுபோனார்கள்.

ரு. மணவாளன் தாமதித்தபொழுது, எல்லாரும் நித்திரைமயக்கம் அடைந்து தூங்கினார்கள்.

சு. அத்தராத்திரியில், பாருங்கள், மணவாளன் வருகிறான்; அவனை எதிர்கொள்ளப் புறப்படுங்களென்று ஒரு சத்தம் பிறந்தது.

எ. அப்பொழுது அந்தக் கன்னியரெல்லாரும் எழுந்து, தீவர்த்திகளை ஆயத்தப்படுத்தினார்கள்.

அ. புத்தியீனர் புத்தியுள்ளவர்களை நோக்கி, உங்கள் எண்ணெயிற் கொஞ்சம் எங்களுக்குத் தாருங்கள்; எங்கள் தீவர்த்திகள் அணைந்துபோகின்றனவென்று சொல்ல,—

௯. புத்தியுள்ளவர்கள் அதற்குத்தரமாய், எங்களுக்கும் உங்களுக்கும் போதாமலிராதபடி, நீங்கள் விற்கிறவர்களிடத்திலே போய், உங்களுக்காகக் கொள்ளுங்களென்றார்கள்.

௰. அவர்கள் கொள்ளப்போகிறபொழுது, மணவாளன் வந்தான்: ஆயத்தமாயிருந்தவர்கள் அவனோடே விவாக வீட்டிலே பிரவேசித்தார்கள்; கதவு பூட்டப்பட்டது.

௰௧. பின்பு மற்றக் கன்னியரும் வந்து, ஆண்டவனே, ஆண்டவனே, எங்களுக்காகத் திறக்கவேண்டுமென்றார்கள்.

௰௨. அதற்குத்தரமாய், அவன், உங்களை அறியேனென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றான்.

௰௩. மனுபுத்திரன் வரும் நாளையாகிலும், நாழிகையாகிலும் நீங்கள் அறியாதபடியால், நீங்கள் விழித்துக்கொண்டிருக்கக்கடவீர்கள்.

௰௪. அவன், தூரதேசத்திற்குப் பிரயாணமாய்ப் புறப்படுகையில், தன் பணிவிடைக்காரரை அழைத்து, தன் பொருளை அவர்களுக்கு ஒப்பித்த மனுஷனைப் போலிருக்கிறான்.

௰௫. அவன் அவரவர் சாமர்த்தியத்துக்கேற்க, ஒருவனுக்கு ஐந்து தாலந்தும், ஒருவனுக்கு இரண்டும், மற்றொருவனுக்கு ஒன்றுங் கொடுத்துப், பின்பு புறத்தேசத்திற்குப் போனான்.

௰௬. ஐந்து தாலந்தைப் பெற்றவன் போய், அவைகளால் வியாபாரம்பண்ணி, வேறைந்து தாலந்தைச் சம்பாதித்தான்.

௰௭. அப்படியே இரண்டைப் பெற்றவனும், வேறிரண்டைச் சம்பாதித்தான்.

௰௮. ஒன்றைப் பெற்றவனோ, போய், நிலத்தைத் தோண்டி, தன் எசமானனுடைய திரவியத்தைப் புதைத்து வைத்தான்.

௰௯. வெகுகாலஞ் சென்றபின்பு அந்தப் பணிவிடைகாரருடைய எசமானன் திரும்பிவந்து, அவர்களோடே கணக்குப்பார்த்தான்.

௨௰. அப்பொழுது ஐந்து தாலந்தைப் பெற்றவன் சேர்ந்து, வேறும் ஐந்து தாலந்தைக் கொண்டுவந்து, ஆண்டவனே, ஐந்து தாலந்தை என்னிடத்தில் ஒப்பித்தீர்: அவைகளால் வேறும் ஐந்து தாலந்தைச் சம்பாதித்தேன், பாருமென்று சொல்ல,—

௨௧. எசமானன் அவனை நோக்கி, நல்லது, உண்மையும் உத்தமமுமுள்ள பணிவிடைக்காரனே, நீ அற்பத்தில் உண்மையாயிருந்தாய்: மிகுதியின்மேல் உன்னை அதிகாரியாய் ஏற்படுத்துவேன்: நீ உன் எசமானுடைய சந்தோஷத்திலே பங்கடைய வாவென்றான்.

௨௨. இரண்டு தாலந்தைப் பெற்றவனுஞ் சேர்ந்து, ஆண்டவனே, நீர் இரண்டு தாலந்தை என்னிடத்தில் ஒப்பித்தீர்: அவைகளால் வேறும் இரண்டு தாலந்தைச் சம்பாதித்தேன்; பாருமென்று சொல்ல,—

௨௩. எசமானன் அவனை நோக்கி, நல்லது, உண்மையும் உத்தமமுமுள்ள பணிவிடைக்காரனே, நீ அற்பத்தில் உண்மையாயிருந்தாய், மிகுதியின்மேல் உன்னை அதிகாரியாக ஏற்படுத்துவேன்: உன் எசமானனுடைய சந்தோஷத்தில் பங்கடைய வாவென்றான்.

௨௪. பின்பு ஒரு தாலந்தைப் பெற்றவன் வந்து, ஆண்டவனே, நீர் விதையாத இடத்திலே அறுக்கிறவரும், தெளியாத இடத்தில் சேர்க்கிறவருமாகிய கடினமான மனுஷனாயிருக்கிறீரென்று நான் அறிந்தேன்.

௨௫. ஆதலால் நான் பயந்து, உமது தாலந்தை நிலத்திலே புதைத்துவைத்தேன்: உம்முடையதை உமக்கு ஒப்பிக்கிறேனென்று சொல்ல—

௨௬. அவன் எசமானன் அவனுக்குத்தரமாய், தீமையுஞ் சோம்பலுமுள்ள பணிவிடைக்காரனே, நான் விதையாத இடத்தில் அறுக்கிறவனென்றும், தெளியாத இடத்திலே சேர்க்கிறவனென்றும், நீ அறிந்தாயே.

௨௭. அப்படியானால் நீ என் திரவியத்தை வியாபாரிகளிடத்திலே கொடுத்துவைக்கவேண்டும்: அப்பொழுது நான் வந்து, என்னுடையதை வட்டியோடே வாங்கிக்கொள்வேனென்று சொல்லி,

௨௮. இவனிடத்தில் இருக்கிற தாலந்தை நீங்கள் எடுத்து, பத்துத்தாலந்தைப் பெற்றவனுக்குக் கொடுங்கள்.

௨௯. உள்ளவனெவனோ, அவனுக்குக் கொடுக்கப்படும்; சம்பூரணமும் அவனுக்குண்டாகும்: உள்ளவனல்லாதவனிடத்திலுள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும்.

௩௰. பலனற்ற பணிவிடைக்காரனாகிய இவனை அழுகையும் பற்கடிப்புமுடையதாகிய மிகவுந் தூரமான இருளிலே தள்ளிவிடுங்களென்றான்.

௩௧. மனுபுத்திரன் தன்னுடைய சகல பரிசுத்த தூதரோடே தனது மகிமையில் வருவான்: அவன் தனது மகிமையுள்ள சிங்காசனத்தின்மேல் வீற்றிருப்பான்.

௩௨. அப்பொழுது சகல சாதியாரும் அவன் சமுகத்தில் கூட்டப்படுவார்கள்: மேய்ப்பன் ஒருவன் செம்மறி ஆட்டை வெள்ளாட்டினின்று பிரிப்பதுபோல, அவர்களை வெவ்வேறாகப் பிரித்து,

௩௩. செம்மறி ஆடுகளைத் தனது வலதுபாரிசத்திலும், வெள்ளாடுகளைத் தனது இடதுபாரிசத்திலும் நிறுத்துவான்.

௩௪. பின்பு இராசா, தமது வலதுபாரிசத்திலுள்ளவர்களை நோக்கி, வாருங்கள், என் பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே, உலகசிருஷ்டி தொடங்கி, உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்பட்ட இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்கள்.

௩௫. நான் பசியாயிருந்தேன்; நீங்கள் எனக்குப் போசனத்தைத் தந்தீர்கள். நான் தாகமாயிருந்தேன்; நீங்கள் எனக்குப் பானத்தைக் கொடுத்தீர்கள். நான் பரதேசியாயிருந்தேன்; நீங்கள் என்னை உங்களிடத்திலே சேர்த்துக்கொண்டீர்கள்.

௩௬. நான் நிருவாணியாயிருந்தேன்; எனக்கு வஸ்திரங் கொடுத்தீர்கள். நான் வியாதியாயிருந்தேன்; என்னை விசாரித்தீர்கள். நான் காவலிலிருந்தேன்; என்னிடத்திற்கு வந்தீர்களென்று சொல்ல,—

௩௭. நீதிமான்கள் அவருக்குத்தரமாய், கர்த்தாவே, நாங்கள் எப்பொழுது உம்மைப் பசியுள்ளவராகக் கண்டு போசனங்கொடுத்தோம்? தாகமுள்ளவராகக் கண்டு பானத்தைக் கொடுத்தோம்?

௩௮. நாங்கள் எப்பொழுது உம்மைப் பரதேசியென்று கண்டு, சேர்த்துக்கொண்டு, நிருவாணியென்று கண்டு, வஸ்திரங்கொடுத்தோம்?

௩௯. நாங்கள் எப்பொழுது உம்மை வியாதியுள்ளவரென்றும், காவலிலிருக்கிறவரென்றுங் கண்டு, உம்மிடத்தில் வந்தோமென்பார்கள்.

௪௰. அதற்குத்தரமாய் இராசா, மிகவுஞ் சிறியரான என் சகோதரராகிய இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்தீர்களோ, அதை எனக்கே செய்தீர்களென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்பான்.

௪௧. பின்பு அவர் தமது இடதுபாரிசத்திலுள்ளவர்களை நோக்கி, சபிக்கப்பட்டவர்களே, நீங்கள் என்னைவிட்டுப், பிசாசானவனுக்காகவும், அவனுடைய தூதர்களுக்காகவும், ஆயத்தப்படுத்தப்பட்ட நித்திய அக்கினியினிடத்திலே போங்கள்.

௪௨. நான் பசியாயிருந்தேன்; நீங்கள் எனக்குப் போசனங் கொடுக்கவில்லை. நான் தாகமாயிருந்தேன்; நீங்கள் எனக்குப் பானங்கொடுக்கவில்லை.

௪௩. நான் பரதேசியாயிருந்தேன்; நீங்கள் என்னை உங்களிடத்திலே சேர்த்துக்கொள்ளவில்லை. நான் நிருவாணியாயிருந்தேன்; நீங்கள் எனக்கு வஸ்திரங் கொடுக்கவில்லை. நான் வியாதியுள்ளவனுங் காவலில் வைக்கப்பட்டவனுமாயிருந்தேன்; நீங்கள் என்னை விசாரிக்கவில்லையென்பான்.

௪௪. அப்பொழுது அவர்கள் அவருக்குத்தரமாய், கர்த்தாவே, உம்மைப் பசியுள்ளவரென்ருவது, தாகமுள்ளவரென்ருவது, பரதேசியென்ருவது, நிருவாணியென்ருவது, வியாதியுள்ளவரென்ருவது, காவலிலிருப்பவரென்ருவது நாங்கள் எப்பொழுது கண்டு, உமக்கு உதவிசெய்யவில்லையென்பார்கள்.

௪௫. அதற்குத்தரமாய் அவன், மிகவுஞ் சிறியரான இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்யாதி

ருந்தீர்களோ, அதை எனக்கே செய்யாதிருந்தீர்களென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்பார்.

௪௬. இவர்கள் நித்திய தண்டனையையும், நீதிமான்களோ, நித்திய ஜீவனையும் அனுபவிக்கப் போவார்களென்றார்.

~~~~~~~~~~~~

## ௨௬. அதிகாரம்.

க. அதிபதிகள் கிறிஸ்துவுக்கு விரோதமாய்த் துராலோசனை செய்தல்: ௬. ஒரு ஸ்திரீ கிறிஸ்துவுக்கு அபிஷேகஞ்செய்தல்: ௰௪. யூதா துரோகஞ்செய்தல்: ௰௭. பஸ்காவைக்குறித்துச் சம்பாஷித்தல்: ௨௧. கர்த்தர் இராப்போசனத்தை நிரூபித்தல்: தோட்டத்தில் துக்கமடைதல்: ௪௭. அவர் ஒப்பிக்கப்படல்: ௫௭. மகா ஆசாரியனிடத்தில் கொண்டுபோகப்படல்: ௫௯. அவர் நியாயம் விசாரிக்கப்படல்: ௬௯. பேதுரு அவரை மறுத்தல்.

க. யேசு இந்த வாக்குகளையெல்லாஞ் சொல்லி முடித்தபின்பு, தம்முடைய சீஷரை நோக்கி,

௨. இரண்டு நாளைக்குப்பின்பு பஸ்கா வருமென்றறிந்திருக்கிறீர்கள். அப்பொழுது மனுபுத்திரன் சிலுவையில் அறையப்படும்படி ஒப்பிக்கப்படுவானென்றார்.

௩. அக்காலத்திலே பிரதான ஆசாரியரும், வேதபாரகரும், சனங்களின் முதியோரும் காய்பா என்னும் மகா ஆசாரியனுடைய அரமனையில் கூடிவந்து,

௪. தந்திரமாய் யேசுவைப் பிடித்து, கொலைசெய்ய ஆலோசனைபண்ணினபொழுது,

௫. உற்சவத்தில் ஆகாது; சனங்களுக்குள்ளே கலகமுண்டாகுமென்றார்கள்.
~~~~~~~~~~~~

௬. யேசு பேதனிய ஊரிலே குஷ்டரோகியாயிருந்த சீமோனுடைய வீட்டிலிருக்கையில்,

௭. ஒரு ஸ்திரீ வெண்கற்பரணியில் விலையுயர்ந்த சுகந்த தைலத்தைக்கொண்டுவந்து, அவர் பந்தியிருந்த சமயத்தில் அவருடைய சிரசின்மேல் ஊற்றினாள்.

௮. அவருடைய சீஷர் அதைக் கண்டு, விசனப்பட்டு, இவ்வளவு வீண்செலவேது?

௯. இந்தத் தைலத்தை உயர்ந்த கிரயத்துக்கு விற்று, தரித்திரருக்குக் கொடுக்கலாமேயென்றார்கள்.

௰. யேசு அதை அறிந்து, அவர்களை நோக்கி, நீங்கள் இந்த ஸ்திரீயை வருத்தப்படுத்துகிறதென்ன? இவள் எனக்கு நற்கிரியையைச் செய்தாள்.

௰௧. தரித்திரர் எப்பொழுதும் உங்களுடனே இருக்கிறார்கள்; நானோ எப்பொழுதும் உங்களோடிருப்பதில்லை.

௰௨. இவள் இந்தத் தைலத்தை என் சரீரத்தின்மேல் ஊற்றினது, என்னை அடக்கம்பண்ணுவதற்கு ஆயத்தமாகச் செய்தாள்.

௰௩. உலகமெங்கும் எவ்விடத்தில் இந்தச் சுவிசேஷம் பிரசித்தமாக்கப்படுமோ, அவ்விடத்தில் இவளை நினைப்பதற்கு இந்த ஸ்திரீ செய்ததுந் தெரிவிக்கப்படுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௰௪. பின்பு பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் காரியோத்து என்பவன் பிரதான ஆசாரியரிடத்திற் போய்,

௰௫. நான் அவரை உங்களுக்குக் காட்டிக்கொடுத்தால், நீங்கள் எனக்கென்ன தருவீர்களென்று கேட்க,—அவர்கள் அவனுக்கு முப்பது வெள்ளிக் காசை நிறுத்துக்கொடுத்தார்கள்.

௰௬. அதுமுதல் அவன் அவரைக் காட்டிக்கொடுக்கச் சமயந் தேடினன்.

௰௭. புளிப்பில்லாத அப்பம் புசிக்கிற நாட்களுக்கு முதல் நாளிலே, சீஷர் யேசுவினிடத்தில் வந்து, பஷ்காவை நாங்கள் எங்கே உமக்கு ஆயத்தம்பண்ணுவோம்? உம்முடைய சித்தமென்னவென்று கேட்க,—

௰௮. அவர், நீங்கள் நகரத்தில் இன்னானிடத்திலே போய், அவனை நோக்கி, காலஞ் சமீபித்திருக்கின்றது: உன் வீட்டில் என் சீஷரோடே பஷ்காவை ஆசரிப்பேனென்று போதகர் சொல்லுகிறாரென்பதைச் சொல்லுங்களென்றார்.

௰௯. யேசு இட்ட கட்டளைப்படி சீஷர் போய், பஷ்காவை ஆயத்தப்படுத்தினார்கள்.

௨௰. சாயங்காலத்திலே அவர் பன்னிருவரோடே பந்தியிருந்தார்.

௨௧. அவர்கள் போசனம்பண்ணுகையில், அவர், உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பானென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௨௨. அப்பொழுது அவர்கள் மிகவுந் துக்கித்து, அவரை நோக்கி, கர்த்தாவே, நானோ அவன்? என்று ஒவ்வொருவராகச் சொல்லத்தொடங்கினார்கள்.

உ௩. அதற்குத்தரமாய் அவர், என்னோடே போசனபாத்திரத்தில் கைதோய்க்கிறவனே என்னைக் காட்டிக்கொடுப்பான்.

உச. மனுபுத்திரன் தன்னைக்குறித்து எழுதியிருக்கிற விதமாய்ப் போகிறான்: எந்த மனுஷன் அவனைக் காட்டிக்கொடுக்கிறானோ, ஐயோ! அவனுக்கு ஆபத்துவரும்: அந்த மனுஷன் பிறவாதிருந்தானானால், அவனுக்கு நலமென்றார்.

உரு. அப்பொழுது அவரைக் காட்டிக்கொடுத்த யூதாவும் அவரை நோக்கி, இரபீ, நானோ அவன்? என்று கேட்க,—அவர் அவனுடனே நீ சொன்னாயென்றார்.

உசா. பின்பு அவர்கள் போசனம்பண்ணுகையில், யேசு அப்பத்தை எடுத்து, துதிசெய்து, அதைப் பிட்டு, சீஷருக்குக் கொடுத்து, நீங்கள் எடுத்துப் புசியுங்கள்; இதுவே என் சரீரமென்றார்.

உஎ. பின்பு அவர் பாத்திரத்தையும் எடுத்து, ஸ்தோத்திரஞ் சொல்லி, அதை அவர்களுக்குக் கொடுத்து, நீங்களெல்லாரும் இதிற் பானம்பண்ணுங்கள்.

உஅ. இதுவே புதிய உடன்படிக்கைக்கேற்க, பாவமன்னிப்புக்கென்று அநேகருக்காகச் சிந்தப்படுகிற என்னுடைய இரத்தம்.

உகூ. நான் உங்களோடே என் பிதாவின் இராச்சியத்தில் நவமாய்ப் பானம்பண்ணும் நாள்வரைக்கும், இந்தத் திராட்சரசத்தை நான் இனிப் பானம் பண்ணேனென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௩௰. அவர்கள் ஒரு பாட்டைப்பாடி, ஒலிவமலைக்குப் புறப்பட்டுப்போனார்கள்.

௩க. அப்பொழுது யேசு அவர்களை நோக்கி, "நான் மேய்ப்பனை அடிப்பேன்; அதினால் மந்தை

யின் ஆடுகள் சிதறிப்போம்'' என்றெழுதியிருக்கிற படி, இந்த இராத்திரியிலே நீங்கள் எல்லாரும் என் னிமித்தம் இடறுண்பீர்கள்.

௩௨. நான் உயிர்த்தெழுந்தபின்பு, உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போவேனென்றார்.

௩௩. அதற்குத்தரமாய்ப் பேதுரு, எல்லாரும் உம் மைக்குறித்து இடறுண்டாலும், நான் ஒருபொழு தும் இடறுண்ணேன் என்றான்.

௩௪. யேசு அவனை நோக்கி, இந்த இராத்திரி யிலே சேவல்கூவுமுன்னே, நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாயென்று மெய்யாய் உனக்குச் சொல்லு கிறேனென்றார்.

௩௫. அதற்குப் பேதுரு, நான் உம்மோடே மரண மடைந்தாலும், உம்மை மறுதலிக்கமாட்டேனென் றான்; சீஷரெல்லாரும் அப்படியே சொன்னார் கள்.

௩௬. பின்பு யேசு அவர்களுடனே கெத்சேம்னி யென்னும் ஸ்தானத்தைச் சேர்ந்து, சீஷரை நோக்கி, நான் அங்கே போய் வேண்டுதல்பண்ணுமளவும், நீங்கள் இவ்விடத்தில் உட்காந்திருங்களென்று சொ ல்லி,

௩௭. பேதுருவையும், செபேதேயுவின் புத்திரர் இருவரையுங் கூட்டிக்கொண்டுபோய், துக்கம டையவும், மிகவும் வியாகுலப்படவுந் தொடங்கி,

௩௮. பின்பு அவர்களை நோக்கி, மரணம் வருவிக் கிற வேதனை என் ஆத்துமா படுகின்றது: நீங்கள் இங்கே தரித்து, என்னோடே விழித்திருங்களென்று சொல்லி,

௬௯. சற்று அப்புறம்போய் முகங் குப்புற விழுந்து, ஆ! என் பிதாவே, கூடுமாகில், இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்; எப்படியும் என் சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவதென்று வேண்டுதல்பண்ணினார்.

சம. பின்பு அவர் சீஷரிடத்தில் வந்து, அவர்கள் நித்திரைபண்ணக்கண்டு, பேதுருவை நோக்கி, நீங்கள் ஒருமணி நேரமளவும் என்னோடே விழித்திருக்கக்கூடாதா?

சக. நீங்கள் சோதனையில் அகப்படாதபடிக்கு விழித்திருந்து வேண்டுதல்செய்யுங்கள்: ஆவி உற்சாகமாயிருக்கின்றது; மாமிசமோ பலவீனமுள்ளதென்று சொல்லி,

சஉ. இரண்டாந்தரம் போய், ஆ! என் பிதாவே, இந்தப் பாத்திரத்தில் நான் பானம்பண்ணினாலன்றி, இது என்னைவிட்டு நீங்கக்கூடாதிருந்தால், உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவதென்று வேண்டுதல்பண்ணினார்.

சரு. அவர்கள் கண்கள் உறக்கங்கொண்டபடியால், அவர் திரும்பிவந்தபொழுது, அவர்கள் பின்னும் நித்திரைபண்ணக்கண்டார்.

சச. அவர் திரும்பவும் அவர்களை விட்டுப்போய் மூன்றாந்தரமும் முந்தின வாக்குகளையே சொல்லி, வேண்டுதல்பண்ணினார்.

சடு. பின்பு அவர் தம்முடைய சீஷரிடத்தில் வந்து, நீங்கள் இனி நித்திரைபண்ணி இளைப்பாறுங்கள்: கேளுங்கள், மனுபுத்திரன் பாவிகளுடைய கைகளில் காட்டிக் கொடுக்கப்படுஞ் சமயஞ் சமீபித்தது.

௪௬. எழுந்திருங்கள், நாம் போவோம்; என்னைக் காட்டிக்கொடுப்பவன் சமீபித்துவருகிறானென்றார்.

௪௭. அவர் பேசுகையில், பன்னிருவரில் ஒருவனாகிய யூதா வந்தான்: அவனோடே பிரதான ஆசாரியராலும், சனங்களின் மூதியோராலும் அனுப்பப்பட்ட திரளான சனங்களுங் கட்கங்களையும், தடிகளையும் பிடித்துக்கொண்டு வந்தார்கள்.

௪௮. அவரைக் காட்டிக்கொடுக்கிறவன் அவர்களை நோக்கி, எவனை நான் முத்தஞ்செய்வேனோ, அவனே அவன்: அவனைப் பிடித்துக்கொள்ளுங்களென்று அடையாளஞ் சொல்லியிருந்தான்.

௪௯. உடனே அவன் யேசுவினிடத்தில் வந்து, இரபீ, நீர் வாழ்கவென்று அவரை முத்தஞ்செய்தான்.

௫0. யேசு அவனை நோக்கி, சிநேகிதா, நீ வந்த காரணமென்ன? என்றார். அப்பொழுது மற்றவர்கள் சேர்ந்து, யேசுவின்மேலே கைகளை வைத்து, அவரைப் பிடித்தார்கள்.

௫௧. அதினால் யேசுவின் கூட்டத்தாரில் ஒருவன் தன் கையை நீட்டி, தன் கட்கத்தை உருவி, மகா ஆசாரியனுடைய பணிவிடைக்காரனைக் காதற வெட்டினான்.

௫௨. அப்பொழுது யேசு அவனை நோக்கி, கேள், நீ உன் கட்கத்தைத் திரும்ப அதின் இடத்தில் போடு; கட்கத்தை எடுக்கிறவர்கள் யாவருங் கட்கத்தினாலே நாசமடைவார்கள்.

௫௩. பன்னிரண்டு லேகியோனுக்கு மேற்பட்ட தேவதூதர்களை எனக்கனுப்பும்படி என் பிதாவை

இப்பொழுது நான் வேண்டிக்கொள்ளக்கூடாதென்று நீ நினைக்கிருயா?

௫௪. அப்படியானல், இவ்விதமாய் நடக்குமென்று சொல்லிய வேதவாக்கியங்கள் எப்படி நிறைவேறும்? என்ருர்.

௫௫. அந்நேரத்திலே யேசு, அந்தத் திரளான சனங்களை நோக்கி, நீங்கள் ஒரு திருடனைப் பிடிக்கப் புறப்படுவதுபோல, கட்கங்களோடுந் தடிகளோடும் என்னைப் பிடிக்கவந்தீர்களா? நாடோறும் நான் தேவாலயத்தில் உங்களுக்குள் இருந்து உபதேசம் பண்ணிவந்தேன்: அப்பொழுது நீங்கள் என்னைப் பிடிக்கவில்லையே.

௫௬. தீர்க்கதரிசிகளின் வாக்கியங்கள் நிறைவேறும்படியாக இவைகளெல்லாம் நடக்கின்றனவென்ருர்: அப்பொழுது சீஷரெல்லாரும் அவரை விட்டு, ஓடிப்போனர்கள்.

௫௭. யேசுவைப் பிடித்தவர்கள் அவரை மகா ஆசாரியனுகிய காய்பாவினிடத்திலே கொண்டுபோனர்கள்: அங்கே வேதபாரகரும் முதியோருங் கூடிவந்திருந்தார்கள்.

௫௮. பேதுருவோ, மகா ஆசாரியனுடைய அரமனைவரைக்குந் தூரத்தில் அவரைப் பின்சென்று, அதிற் பிரவேசித்து, முடிவைக் காணும்படி சேவகருடன் உட்காந்தான்.

௫௯. அப்பொழுது பிரதான ஆசாரியரும், முதியோரும், மற்றச் சங்கத்தாரனைவரும் யேசுவைக் கொலைசெய்யும்படி அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சி தேடியும் அகப்படவில்லை.

௬௰. அநேகர் வந்து பொய்ச்சாட்சி சொல்லியும் ஒவ்வவில்லை.

௬௧. பின்பு இரண்டுபேர் வந்து, இவன் தேவாலயத்தை இடித்து, மூன்று நாளைக்குள்ளே கட்ட வல்லவனாயிருக்கிறேனென்றானென்று பொய்ச்சாட்சி சொன்னார்கள்.

௬௨. அப்பொழுது மகா ஆசாரியன் எழுந்து, அவரை நோக்கி, இவர்கள் உனக்கு விரோதமாய்ச் சொல்லுகிற சாட்சியென்ன? இதற்குத்தரமாக ஏதாயினுஞ் சொல்வதில்லையா? என்றான்.

௬௩. யேசு பேசாமலிருந்தார்; அப்பொழுது மகா ஆசாரியன் அவரை நோக்கி, தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து நீதானா? அதை எங்களுக்குச் சொல்லென்று, சீவனுள்ள தேவனைக்கொண்டு ஆணையிட்டு, உன்னைக் கேட்கிறேனென்றான்.

௬௪. யேசு அவனை நோக்கி, நீ சொன்னாயே: அன்றியும் இனிமேல் நீங்கள் மனுபுத்திரனைச் சருவவல்லமையுள்ளவருடைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கவும், வானத்தின் மேகங்களிலே வரவுங் காண்பீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௬௫. மகா ஆசாரியன் அதைக் கேட்டவுடனே தன் வஸ்திரங்களைக் கிழித்து, இவன் தேவதூஷணஞ் சொன்னான்; இனிச் சாட்சிகள் நமக்கு வேண்டுவதென்ன? இப்பொழுதே இவன் தூஷணத்தைக் கேட்டீர்களே.

௬௬. உங்களுக்கு எப்படித் தோன்றுகின்றது? என்றான்; அதற்குத்தரமாய் அவர்கள், இவன் மரணத்திற்குப் பாத்திரனென்றார்கள்.

௬௭. அப்பொழுது சிலர் அவருடைய முகத்திலே துப்பினார்கள்; சிலர் அவரைக் குட்டினார்கள்; சிலர் அவருடைய கன்னத்தில் அறைந்து,

௬௮. கிறிஸ்துவே, உம்மை அடித்தவன் யாவன்? அதை ஞானதிருஷ்டியினால் எங்களுக்குச் சொல்லு மென்றார்கள்.

௬௯. பேதுரு அரமனையின் பிரகாரத்தில் இருந் தான். அப்பொழுது பணிவிடைக்காரி ஒருத்தி அவனிடத்திலே, நீயும் கலிலேயனாகிய யேசுவோ டே இருந்தாயென்றாள்.

௭௰. அதற்கு அவன், நீ பேசுகிறது எனக்குத் தெரியாதென்று எல்லாருக்குமுன்பாக மறுதலித் தான்.

௭௧. அவன் மண்டபத்திற்குப் போகையில், வே றொருத்தி அவனைக் கண்டு, இவனும் நசரீயனாகிய யேசுவுடனே இருந்தானென்று அங்கே இருந்தவர் களுக்குச் சொன்னாள்.

௭௨. பின்னும் அவன், நான் அந்த மனுஷனை அறியேனென்று சொல்லி, ஆணையிட்டு மறுதலித் தான்.

௭௩. சற்றுநேரத்துக்குப்பின்பு, அங்கே நின்ற வர்கள் பேதுருவினிடத்தில் வந்து, மெய்யாக நீயும் அவர்களில் ஒருவன்: உன் உச்சரிப்பு உன்னை வெளிப்படுத்துகின்றதென்றார்கள்.

௭௪. அதினாலே பேதுரு, நான் அந்த மனுஷனை அறியேனென்று சபதஞ்செய்யவும், ஆணையிடவுந் தொடங்கினான். உடனே சேவல் கூவிற்று.

௭௫. சேவல் கூவுமுன், நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாயென்று யேசு தனக்குச் சொல்லிய வாக்கைப் பேதுரு நினைந்து, வெளியே போய், மனங்கசந்து அழுதான்.

# ௨௭. அதிகாரம்.

க. கிறிஸ்து பிலாத்துவின்கையில் ஒப்பிக்கப்படல்: ௩. யூதா மனஸ்தாபப்பட்டுச் சாதல்: ௰௧. கிறிஸ்து பிலாத்துவினிடத்தில் சாட்சியிட்டு மவுனமாதல்: ௰௫. சனங்களுடைய முறைமைகளில் ஒன்றைக் காட்டல்: ௰௯. பிலாத்துத் தன் மனதை வெளிப்படுத்தல்: ௨௭. கிறிஸ்துவைக் கொலைசெய்யக் கொண்டுபோதல்: ௩௨. கிறிஸ்துவைச் சிலுவையில் அறைதல்: ௩௯. கிறிஸ்துவை நிந்தித்தல்: ௪௫. கிறிஸ்து சிலுவையில் உரத்தசத்தமிடல்: ௫௰. அவருடைய மரணத்தறுவாயில் அற்புதங்களுண்டாதல்: ௫௫. ஸ்திரீகள் சமீபித்துவருதல்: ௫௭. கிறிஸ்துவை அடக்கம்பண்ணல்: ௬௨. காவலாளரை நியமித்தல்.

க. விடியற்காலமானபொழுது, பிரதான ஆசாரியரும், சனங்களின் முதியோருமாகிய யாவரும் யேசுவைக் கொலைசெய்யும்படி ஆலோசனைபண்ணி,
௨. அவரைக் கட்டிக்கொண்டுபோய், பொந்தியு பிலாத்தென்னும் அதிபதியினிடத்தில் அவரை ஒப்பித்தார்கள்.

௩. அவரைக் காட்டிக்கொடுத்த யூதா, அவர் மரணமடையத் தீர்க்கப்பட்டதைக் கண்டபொழுது மனஸ்தாபமடைந்து, அந்த முப்பது வெள்ளிக்காசையும் பிரதான ஆசாரியரிடத்திலும், முதியோரிடத்திலுந் திரும்பக் கொடுத்து,

௪. நான் குற்றமில்லாதவரைக் காட்டிக்கொடுத்ததினாலே, பாவஞ்செய்தேனென்றான்; அதற்கு அவர்கள், எங்களுக்கென்ன? நீயே அதைப் பார்த்துக்கொள்ளென்றார்கள்.

௫. பின்பு அவன் அந்த வெள்ளிக்காசைத் தேவாலயத்தில் எறிந்து, புறப்பட்டுப்போய், நான்றுகொண்டான்.

௬. பிரதான ஆசாரியர் அந்தப் பணத்தை எடுத்து, இது இரத்தக்கிரயம்; ஆதலால் இதைக் காணிக்கைப் பெட்டியில் சேர்ப்பது தகாதென்று சொல்லி,

௭. அவர்கள் ஆலோசனைபண்ணினபின்பு, பரதேசிகளை அடக்கம்பண்ணும்படி அதற்குக் குயவனிலத்தைக் கொண்டார்கள்.

௮. இதினிமித்தம், இந்நாள்வரைக்கும் அந்த நிலம், இரத்தநிலமென்னப்பட்டிருக்கின்றது.

௯. இவ்விதமாய், "இஸரவேற் சனங்களால் மதிக்கப்பட்டவருடைய கிரயமாகிய முப்பது வெள்ளிக்காசை அவர்கள் எடுத்து,

௰. கர்த்தர் எனக்குக் கட்டளையிட்டபடி அதைக் குயவநிலத்துக்காகக் கொடுத்தார்கள்" என்று எரேமியா தீர்க்கதரிசி சொல்லிய வாக்கு நிறைவேறிற்று.

௰௧. யேசு அதிபதிக்கு முன்பாக நின்றபொழுது, அவன் அவரை நோக்கி, நீ யூதருடைய இராசாவா? என்று கேட்க,—யேசு அவனுடனே, நீ சொல்லுகிறாயேயென்றார்.

௰௨. பிரதான ஆசாரியரும், முதியோரும் அவர்மேற் குற்றஞ்சாற்றினபொழுது, அவர் உத்தரமாய் ஒன்றுஞ் சொல்லவில்லை.

௰௩. பின்பு பிலாத்து அவரை நோக்கி, இவர்கள் உனக்கு விரோதமாய் இத்தனை குற்றங்களைச் சாற்றுகிறார்களென்பதை நீ கேட்கவில்லையா? என்றான்.

௰௪. அவர் அவனுக்குத்தரமாய் ஒரு வாக்குஞ் சொல்லவில்லை: அதினால் அதிபதியானவன் மிகவும் ஆச்சரியப்பட்டான்.

௰௫. அந்த உற்சவ சமயத்தில், காவலிலிருந்தவர்களுக்குள் எவனைச் சனங்கள் கேட்பார்களோ, அவனை அதிபதி விடுதலையாக்குவது வழக்கம்.

௰௬. அக்காலத்திலே பேர்பெற்ற பரப்பாசென்பவன் காவலிலிருந்தான்.

௰௭. ஆகையால் சனங்கள் கூடியிருக்கையில், பிலாத்து அவர்களை நோக்கி, பரப்பாசையோ, கிறிஸ்துவென்னும் யேசுவையோ, எவனை உங்களுக்கு விடுதலையாக்கவேண்டும்? உங்கள் விருப்பமென்னவென்று கேட்டான்.

௰௮. அவர்கள் பொறாமையினால் அவனை ஒப்பித்தார்களென்று அவன் அறிந்தான்.

௰௯. அன்றியும் அவன் நியாயாசனத்திலிருக்கையில், அவனுடைய மனைவி அவனிடத்தில் ஆளனுப்பி, நீர் அந்த நீதிமானை ஒன்றுஞ் செய்யாதிரும்: நான் இன்றைக்குச் சொப்பனத்தில் அவனைக் குறித்து மிகுதியுந் துயரப்பட்டேனென்று சொல்லுவித்தாள்.

உ௰. பிரதான ஆசாரியரும், முதியோரும் பரப்பாசைக் கேட்கும்படிக்கும், யேசுவைக் கொலைசெய்விக்கும்படிக்கும், சனங்களை ஏவினார்கள்.

உக. பின்பு இவ்விருவரில் எவனை நான் உங்களுக்கு விடுதலைபண்ணவேண்டுமென்று அதிபதி சனங்களிடத்திலே கேட்டபொழுது, அவர்கள் பரப்பாசை என்றார்கள்.

உஉ. அதற்குப் பிலாத்து, கிறிஸ்துவென்னப்பட்ட யேசுவை நான் என்னசெய்யவேண்டுமென்று கேட்க,—சிலுவையில் அறையவேண்டுமென்று எல்லாரும் அவனுடனே சொன்னார்கள்.

உ௩. அதிபதி, ஏன்? என்ன குற்றஞ்செய்தானென்று கேட்க,— அவர்கள் மேலும் மேலுஞ் சத்த

மிட்டு, அவனைச் சிலுவையில் அறையவேண்டு மென்றார்கள்.

௨௪. பிலாத்து எல்லாம் வீணென்றும், கலகம் அதிகரிக்கிறதென்றுங் கண்டு, சனங்களுக்கு முன்பாகச் சலத்தை அள்ளி, தன் கைகளைக் கழுவி, நான் இந்த நீதிமானின் இரத்தத்திற் குற்றமில்லாதவன்; நீங்களே பாருங்களென்றான்.

௨௫. அதற்குத்தரமாய்ச் சமஸ்த சனங்களும், இவனுடைய இரத்தம் எங்கள்மேலும், எங்கள் பிள்ளைகள்மேலுமிருப்பதாகவென்றார்கள்.

௨௬. அப்பொழுது அவன் பரப்பாசை அவர்களுக்கு விடுதலையாக்கி, யேசுவை வாரினால் அடிப்பித்து, சிலுவையில் அறையும்படி ஒப்பித்தான்.

௨௭. அப்பொழுது அதிபதியின் போர்ச்சேவகர் யேசுவை அதிபதியின் வீட்டுக்குக் கொண்டுபோய், அவரிடத்தில் போர்ச்சேவகர் கூட்டத்தை எல்லாங் கூட்டினார்கள்.

௨௮. அவருடைய வஸ்திரங்களைக் களைந்து, சிவந்த மேலங்கியை அவருக்குத் தரித்து,

௨௯. முள்ளுகளால் ஒரு முடியைப் பின்னி, அவருடைய சிரசின்மேலே சூட்டி, அவருடைய வலக்கையில் ஒரு கோலைக் கொடுத்து, பின்பு அவர் சமுகத்தில் முழங்கால்படியிட்டு, யூதரின் இராசாவே, வாழ்கவென்று அவரைப் பரிகாசம் பண்ணி,

௩௰. அவர்மேலே துப்பி, அந்தக் கோலை எடுத்து அவருடைய சிரசில் அடித்தார்கள்.

௩௧. அவரைப் பரிகாசம்பண்ணினபின்பு, அவர்கள் அவருக்கு உடுத்தின மேலங்கியைக் களைந்து,

அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி, அவரைச் சிலுவையில் அறையும்படி கொண்டுபோனார்கள்.

௩௨. அவர்கள் வெளியே புறப்படுகையில், குரேனியனாகிய சீமோன் என்பவனைக் கண்டு, அவருடைய சிலுவையைச் சுமக்கும்படி அவனை வலாற்காரம்பண்ணினார்கள்.

௩௩. பின்பு அவர்கள் தலையோட்டிடமென்றர்த்தங்கொள்ளுங் கொல்கொதாவென்னும் ஸ்தானத்திலே சேர்ந்தபொழுது,

௩௪. கசப்புக்கலந்த காடியை அவருக்குக் குடிக்கக்கொடுத்தார்கள். அவர் அதை ருசிபார்த்து, குடிக்கப் பிரியப்படவில்லை.

௩௫. அவர்கள் அவரைச் சிலுவையில் அறைந்த பின்பு, அவருடைய வஸ்திரங்களுக்குச் சீட்டுப்போட்டு, அவைகளைப் பங்கிட்டார்கள்: அதினால் "என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிடுகிறார்கள், என் உடைக்குச் சீட்டுப்போடுகிறார்கள்" என்று தீர்க்கதரிசியினாலே சொல்லப்பட்ட வாக்கு நிறைவேறிற்று.

௩௬. பின்பு அவர்கள் அங்கே உட்கார்ந்து, அவரைக் காவல்பண்ணினார்கள்.

௩௭. அவருடைய மரணத்தின் காரணத்தைக் குறிக்கும்படிக்கு "இவன் யூதருடைய இராசாவாகிய யேசு" என்று எழுதி, அவருடைய சிரசுக்குமேலே வைத்தார்கள்.

௩௮. அவருடைய வலதுபுறத்தில் ஒருவனும், இடதுபுறத்தில் ஒருவனுமாக இரண்டு கள்ளர் அவருடனே சிலுவையில் அறையப்பட்டார்கள்.

௩௯. வழிப்போக்கர் அவனைத் தூஷணித்து, தங்கள் தலைகளை அசைத்து,

௪௰. தேவாலயத்தை இடித்து மூன்றுநாளுக்குள்ளே கட்டுகிறவனே, நீ உன்னைத்தான் இரட்சித்துக்கொள்; நீ தேவனுடைய குமாரனானால், சிலுவையிலிருந்து இறங்கிவாவென்றார்கள்.

௪௧. அப்படியே பிரதான ஆசாரியரும், வேதபாரகரும், மூதியோரும் இவன் மற்றவர்களை இரட்சித்தானே; தன்னை இரட்சித்துக்கொள்ள வல்லமையில்லை.

௪௨. இவன் இஸரவேலின் இராசாவானால், இப்பொழுதே சிலுவையிலிருந்து, இறங்கிவரட்டும்; அப்பொழுது இவனை விசுவாசிப்போம்.

௪௩. இவன் தன்னைத் தேவனுடைய குமாரனென்று சொல்லி, தேவன்மேல் நம்பிக்கையாயிருந்தானே: அவர் இவன்மேற் பிரியமானால், இப்பொழுதே இவனை இரட்சிப்பாராகவென்று அவனைப் பரிகாசம்பண்ணினார்கள்.

௪௪. அவரோடே சிலுவையில் அறையப்பட்ட கள்ளரும் அவனை நிந்தித்தார்கள்.

௪௫. ஆறும்மணி நேரந்தொடங்கி, ஒன்பதாம் மணி நேரம்வரைக்கும், அத்தேசமெங்கும் அந்தகாரமுண்டாயிருந்தது.

௪௬. ஒன்பதாம்மணி நேரத்தில் யேசு, "ஏலி, ஏலி, லாமாசபக்தானி" என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டார்: அதற்கு, என் தேவனே, என் தேவனே, நீர் ஏன் என்னைக் கைவிட்டீரென்றருத்தமாம்.

௪௭. அவ்விடத்தில் நின்றவர்களிற் சிலர் அதைக் கேட்டு, இவன் இலீசாவைக் கூப்பிடுகிறானென்றார்கள்.

சஅ. உடனே அவர்களில் ஒருவன் ஓடி, கடற்காளானை எடுத்து காடியால் நிரப்பி, அதை ஒரு கம்பிலே பூட்டி, அவருக்குக் குடிக்கக்கொடுத்தான்.

சகூ. மற்றவர்களோ, பொறு; இலீசா, இவனை இரட்சிக்கவருவானோ? அதைப் பார்ப்போமென்றார்கள்.

ருய. யேசு திரும்பவும் மிகுந்த சத்தமிட்டு, ஆவியை விட்டார்.

ருக. அப்பொழுது தேவாலயத்திலுள்ள திரைச்சீலை, தலைதொடங்கி அடிவரைக்கும் இரண்டாகக் கிழிந்தது; பூமியும் அதிர்ந்தது; கல்மலைகளும் பிளந்தன.

ருஉ. பிரேதவறைகளுந் திறந்தன; மகா நித்திரை அடைந்திருந்த பரிசுத்தவான்கள் அநேகருடைய சரீரங்கள் எழுந்தன.

ருங. அவர் உயிர்த்தெழுந்தபின்பு, இவர்கள் பிரேதவறைகளை விட்டு, புறப்பட்டு, பரிசுத்த நகரத்திலே பிரவேசித்து, அநேகருக்குத் தரிசனமானார்கள்.

ருச. நூறுசேவகருக்கு அதிபதியும், அவனோடே யேசுவைக் காவல்பண்ணினவர்களும் பூமி அதிர்ச்சியையும், மற்றைச் சங்கதிகளையும் கண்டபொழுது, மிகவும் பயந்து, மெய்யாய் இவர் தேவனுடைய குமாரனென்று சொல்லிக்கொண்டார்கள்.

ருரு. அப்பொழுது மக்தலீனி மரியாள், யாக்கோபுக்கும் யோசேக்கும் மாதாவாகிய மரியாள், செபேதேயுவின் புத்திரருடைய மாதா முதலிய ஸ்திரீகள் அநேகர்,

ருசு. அங்கே தூரத்திலே பார்த்துக்கொண்டிருந்தார்கள்; இவர்கள் யேசுவைச் சேவித்துக்கொண்டு,

கலிலேயாவிலிருந்து அவரைப் பின்பற்றி வந்தவர்கள்.

௫௭. சாயங்காலத்தில் அரிமத்தியா ஊரிலுள்ள ஐசுவரியவானும், யேசுவின் சீஷனுமாகிய யோசேப்பென்பவன் பிலாத்துவினிடத்திலே போய், யேசுவின் சரீரத்தைக் கேட்டான்.

௫௮. அப்பொழுது அதை அவனுக்குக் கொடுக்கும்படி பிலாத்து கட்டளையிட்டான்.

௫௯. யோசேப்பு அந்தச் சரீரத்தை எடுத்து, துய்யதாகிய மெல்லிய புடவையில் அதைச் சுற்றி,

௬௰. தான் கன்மலையில் வெட்டுவித்திருந்த தன்னுடைய புதிய பிரேதவறையில் அதை வைத்து, அப்பிரேதவறையின் வாசலில் ஒரு பெரிய கல்லைப் புரட்டி வைத்துவிட்டுப் போனான்.

௬௧. மக்தலீனி மரியாளும், மற்ற மரியாளும் பிரேதவறைக்கெதிர்ப்புறத்தில் உட்காந்திருந்தார்கள்.

௬௨. ஆயத்தநாளுக்கு மறுநாள், பிரதான ஆசாரியரும், பரிசேயரும் பிலாத்துவினிடத்தில் கூடி வந்து,

௬௩. ஆண்டவனே, அந்த வஞ்சகன், நான் மூன்றுநாளுக்குப்பின் எழுந்திருப்பேனென்று உயிரோடிருந்தபொழுது சொன்னது எங்கள் நினைவில் வந்தது.

௬௪. ஆதலால் அவனுடைய சீஷர் இராத்திரியிலே வந்து, அவனைக் களவெடுத்துப்போய், பின்பு மரித்தோரிலிருந்து எழுந்தானென்று சனங்களுக்குச் சொல்லாதபடிக்கும், முந்தின வஞ்சனையிலும் பிந்தின வஞ்சனை பெரிதாகாதபடிக்கும், மூன்று நாள்வரைக்கும் பிரேதவறையைக் காவல்பண்ணக் கட்டளையிடவேண்டுமென்றார்கள்.

௬௫. பிலாத்து அவர்களுடனே, காவலாளர் உங்களிடத்திலுண்டு; நீங்கள் போய், உங்களால் இயன்றளவும் பத்திரப்படுத்துங்களென்றான்.

௬௬. அவர்கள் போய், கல்லுக்கு முத்திரையிட்டு, காவலாளரை ஏற்படுத்தி, பிரேதவறையைப் பத்திரப்படுத்தினார்கள்.

---

## உஅ. அதிகாரம்.

க. கிறிஸ்து உயிர்த்தெழுதல்: ௰க. காவலாளருக்குப் பரிதானங்கொடுத்தல்: ௰௬. கிறிஸ்து தரிசனமாகி, அவர்களுக்குக் கட்டளையிடல்.

க. ஓய்வுநாள் முடிந்தபின்பு, வாரத்தின் முதலாம்நாள் வைகறையில், மக்தலேனா மரியாளும் மற்ற மரியாளும் பிரேதவறையைப் பார்க்க வந்தார்கள்.

உ. அப்பொழுது பூமி மிகவும் அதிரும்படி கர்த்தருடைய தூதன் ஒருவன் வானத்தினின்று இறங்கி வந்து, வாசலிலிருந்த கல்லைப் புரட்டித் தள்ளி, அதின்மேல் உட்கார்ந்தான்.

௩. அவனுடைய முகம் மின்னல்போலவும், அவனுடைய வஸ்திரம் உறைந்த மழையைப்போலவும், வெண்மையாயிருந்தன.

௪. காவலாளர் அவனைக் கண்டு, பயத்தினாலே நடுங்கி, மரித்தோரைப்போலானார்கள்.

௫. தூதன் அந்த ஸ்திரீகளை நோக்கி, நீங்கள் பயப்படவேண்டாம்: சிலுவையில் அறையப்பட்ட யேசுவைத் தேடுகிறீர்களென்று அறிந்திருக்கிறேன்.

௬. அவர் இங்கே இல்லை: அவர் சொல்லியபிரகாரம் எழுந்திருக்கிறார்: கர்த்தர் வைக்கப்பட்ட இடத்தை நீங்கள் வந்து, பாருங்கள்.

௭. விரைந்துபோய், அவருடைய சீஷரை நோக்கி, அவர் மரித்தோரை நீங்கி, எழுந்துவிட்டார்; அவர் உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போவார்; அங்கே அவரைக் காண்பீர்களென்று சொல்லுங்கள்.

௮. பாருங்கள், நான் இந்தச் செய்தியை உங்களுக்குத் தெரிவித்தேனென்றான்: உடனே அவர்கள் பயத்தோடும், மிகுந்த சந்தோஷத்தோடும் பிரேதவறையைவிட்டு, அவருடைய சீஷருக்குச் செய்தியைத் தெரிவிக்கும்படி ஓடினார்கள்.

௯. அவர்கள் அவருடைய சீஷருக்கு அறிவிக்கப் போகையில், யேசு அவர்களுக்கு எதிர்ப்பட்டு, நீங்கள் வாழ்க என்றார்: அவர்கள் சேர்ந்து அவருடைய பாதங்களைக் கட்டிக்கொண்டு, அவரை நமஸ்கரித்தார்கள்.

௰. அப்பொழுது யேசு அவர்களை நோக்கி, பயப்படாதிருங்கள்: கலிலேயாவுக்குப் போகும்படி என் சகோதரருக்குச் சொல்லுங்கள்: அங்கே அவர்கள் என்னைக் காண்பார்களென்றார்.

௰௧. அவர்கள் போகையில், காவலாளரிற் சிலர் நகரத்திலே சென்று, நடந்த யாவற்றையும் பிரதான ஆசாரியருக்குத் தெரிவித்தார்கள்.

௰௨. அப்பொழுது அவர்கள் முதியோரோடே கூடிவந்து, ஆலோசனைபண்ணி, பின்பு அந்தப் போர்ச்சேவகருக்கு மிகுந்த பணத்தைக் கொடுத்து;

௰௩. நாங்கள் நித்திரைபண்ணுகையில், அவனுடைய சீஷர் இராத்திரியில் வந்து, அவனைக் களவாய்க் கொண்டுபோனார்களென்று சொல்லுங்கள்.

௰௪. இது அதிபதியின் செவிக்கேறினால், நாங்கள் அவரைச் சமாதானப்படுத்தி, உங்களைத் தப்புவிப்போமென்றார்கள்.

௰௫. அவர்கள் அந்தப் பணத்தை வாங்கிக்கொண்டு, தங்களுக்குக் கிடைத்த கட்டளைப்படி செய்தார்கள்: யூதருக்குள் இந்நாள்வரைக்கும் இந்தச் சங்கதி பிரசித்தமாயிருக்கின்றது.

௰௬. பதினொரு சீஷரும், கலிலேயாநாட்டில் யேசு தங்களுக்குக் குறித்த மலைக்குப் போனார்கள்.

௰௭. அங்கே அவர்கள் அவரைக் கண்டு, நமஸ்கரித்தார்கள்: சிலரோ சந்தேகப்பட்டார்கள்.

௰௮. அப்பொழுது யேசு சேர்ந்து, அவர்களை நோக்கி, பரமண்டலத்திலும், பூமண்டலத்திலுமுள்ள சகல அதிகாரமும் எனக்கு ஒப்பிக்கப்பட்டிருக்கின்றது.

௰௯. ஆதலால் நீங்கள் புறப்பட்டுப்போய், சருவ தேசத்தாரையுஞ் சீஷராக்கி, பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தினால் அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து,

௨௰. நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் கைக்கொள்ளும்படி, அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள். பாருங்கள், உலகம் ஒழியுமளவும், சதாகாலங்களிலும் நான் உங்களோடிருக்கிறேன் என்றார். ஆமென்.

